8-3

உ

சிவமயம்.

பேரையூர்,

ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள் செய்த,

# வைராக்கிய தீபத்துக்கு,

திருப் போரூர்,

## ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்,

இயற்றிய பொழிப் புரையின்,

**உதாரணக் கவி 73-க்கு,**




திருப் பூ வணம், வேதாந்த மடம்,

சத சாஸ்திர கர்த்தா,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்

இயற்றிய,

## தீபச் சுடர் என்னும் உரை.

விலை] 1963. [ரூபாய் ஒன்று.



**பாயிரம்.**

பேரையூர்ச் சாந்த லிங்கதே சிகனுற்
பெறும்வயி ராகதீ பத்துப்,
போரையூர்ச் சிதம்ப ரதேசிகன் புணேந்த
பொழிப்புரை உதாரணக் கவிக்கு,
மாரைப்பூ வணத்து நூறுநூற் கருத்தா
மாசில்கா சிகாநந்தத் துறவோன்,
ஆரைத்தீ பச்சு டரெனும்பேர் உரையை
அன்பர்கட் காக்கினன் மாதோ.

பொருள்வைமா நகர்வாழ் உகந்தலிங் கேசன்
புநிததா மரைஅடி களையும்.
அருள்தருங் கோவில் ஊர்முத்தி ராம
ஆரியன் சருருக அடியை;
இருளடுந் திருக் களர்வீர சேகர
இறையடி களையுமே வணங்கிப்,
பொருளினை விளக்கும்தீ பச்சுடர் உரையைப்
புனேந்தனன் காசிகா நந்தன்.

---

பேரை யூர்

# ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள்

இயற்றிய

# வைராக்கிய தீபத்துக்கு

திருப் போரூர்.

## ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் இயற்றிய

பொழிப் புரையின், உதாரணக் கவி 73க்கு,

திருப் பூ வணம், வேதாந்த மடம்,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்**

இயற்றிய,

# தீபச் சுடர் என்னும் உரை,

இது

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்**

மதுரை, அஜந்தா பிரிண்டர்சில் பதிப்பிக்கப்பட்டது.

**1963.**

விலை ரூபாய்] [ஒன்று.

## உதாரண சாத்திரங்கள் 26. கவி 73 க்கு விபரம்.

1 சிவ தருமோத்தரம் 9

1 வலஞ்செய்து 2–25
2 இறந்தே முனமே 8–20
3 என்றென் றெண்ணி 8–21
4 அங்கியதனிற் 8–22
5 கருப்பாசயமே 8–23
6 பொற்கடத்தில் 8–32
7 தநத்திஜ 8–86

1-a. குறுந் திரட்டு

8 பரணமாகிய (நிலையாமை) 7

1-b. மெய்ஞ் ஞாந விளக்கம்

9 வந்திடு மரணத்

2 திருக் குறள்–2.

10 நன்றறிவாரிற் 2-13-2
11 அகலா தணு 2–7–1

3. தேவி காலோத்தரம். 5

12 ஒருபொருளெக்காலத்து
13 துக்கசுக
14 சமயாசார
15 தனக்கினிய
16 நடுங்காம

4. வாசிட்டம் 4.

17 மிகமுயன்று 2-0–4
18 வெங்காதற் 4.4-43
19 வெம்புதல் போய் 5-7-22
20 எனக்கி தென்னு 6-0-63

5. சம்பந்த சுவாமிகள் தேவரம் 2.

திருக் கடைக் காப்பு

21 புலனைந்தும் (திருவை யாறு) 1
22 தந்தைதாய் (திரு வாரூர்) 9

6 தத்வ ரத்நாகரம் 1

23 வாக்கொடு மநமு

7. திரு மந்திரம். 7

24 பிறப்பறியார் 1626
25 இருந்து வருந்தி 1627
26 அச்சினுணின்ற 1885
27 பரந்துல கேழும் 1888
28 விரைந்தன்று 2087
29 உடலாங் குகை
30 நிற்றலிருத்தல்

8. திரு நாவுக் கரசு சுவாமிகள் தேவாரம். 2

31 பழகினுல் வரும் (திருச் சேறை) 9
32 நங்கடம்பனை (திருக் கடம் பூர்) 9

9. ஞாநாசாரம் 1

33 மருளுறு மெவையு

10. அருட் பிரகாசம் 1

34 உயிர் நித்த

11 அறிவாநந்த சித்தியார் மோக்ஷ ஏது. 35

35 அளிமலர் விட்டுவிட்

12 காசி காணடம் 1.

36 கருவிடையமுந்துந்

13 சுத்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரம். 1

37 தேனைக்காவல் (ஊர்த் தொகை) 7

14. மெய்ஞ் ஞாந விளக்கம் 5

38 நலமிலா
39 பிணிபினுல்
40 பிறிவிலாத
41 முன்னமே பாக
42 உறங்கிடிற்

15 திரு வள்ளுவ மாலை. 2

43 செய்யா மொழி,

23. வெள்ளி வீதியார்

44 ஆரியமுஞ்

43. வண்ணக்கஞ்சாரனர்

16. கூர்ம புரணம். 3

45 ஈங்கிவை பிற
46 இல்லற முய
47 இவ்வகை யைய

17. சமாதி 2

# வைராக்கிய தீப உதாரணச் சாத்திர அட்டவணை.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சிவ தருமோத்தரம் | 9 | 11 | அறிவாநந்த சித்தியார் | 1 | 22 | பொருந் திரட்டு | 3 |
| 2 | திருக் குறள் | 2 | 12 | காசி காண்டம் | 1 | 23 | திவ்யப் பிரபந்தம் (திருவாய் மொழி) | 2 |
| 3 | தேவி காலோத்தரம் | 5 | 13 | சுத்தா மூர்த்தி சுவாமிகள் தேவாரம் | 1 | 24 | பகவற் கீதை | 2 |
| 4 | வாசிட்டம் | 4 | 14 | மெய்ஞ் ஞாந விளக்கம் | 5 | 25 | பிரஹ்ம கீதை | 1 |
| 5 | சம்பந்த சுவாமிகள் தேவாரம் | 2 | 15 | திரு வள்ளுவ மாலை | 2 | 26 | தத்துவ ராய சுவாமிகள் அடங்கன் முறை | |
| 6 | தத்வ ரத்நாகரம் | 1 | 16 | கூர்ம புராணம் | 3 | | (நான் மணி மாலை) | 1 |
| 7 | திரு மந்திரம் | 7 | 17 | சமாதி | 2 | | (அஞ்ஞ வதைப் பரணி | 1 |
| 8 | திரு நாவுக் கரசு சுவாமிகள் தேவாரம் | 2 | 18 | சமயாசாரம் | 1 | | (அமிர்த சாரம்) | 1 |
| 9 | ஞாநாசாரம் | 1 | 19 | அநுபவ சித்தி | 3 | | ஆக சாத்திரம் | 26 |
| 10 | அருட் பிரகாசம் | 1 | 20 | ஆநந்த போதம் | 1 | | ஆககவி | 73 |
| | | | 21 | குறுந் திரட்டு | 8 | | | |

உ சிவமயம்.

# வைராக்கிய தீப உதாரணக் கவி
# தீபச் சுடர் உரை.

**மூலம் ।। உடலிதுற்பவத்தோ.**

சிவ தருமோத்தரம். அத்–8–கவி 21.

என்றென் றெண்ணி யிருக்குமுயி ரிடர்ப்பட் டழியு
மெழில்வரைக்கீ,
ழொன்று மொருவன் றனைப்போலக் கருப்பா
சயப்பை யுறுத்துதலான்,
மன்ற வுததி மறிந்தாழ்வான் வருத்த மென்ன வருந்தியிடு,
நின்ற கருப்பா சயவுதக வெள்ளங் கொள்ள
நிறையழிந்தே.

("இறந்தே மூனமே" எனும் [8.20] தொடக்கத்து)

(இ-ள்) உயிர்-(இந்த) ஜீவனானவன், என்று என்று எண்ணி இருக்கும்-(இனி பூமியில் பிறவா நெறியை) எக் காலத்து (அடைவோம்) என்று கருதியிருக்கும். எழில் வரைக் கீழ்-அழகிய பருவதத்தின் கீழே, ஒன்றும்-அகப்பட்டுக் கொண்ட, ஒருவன் தனைப் போல-ஒருவன் (என்ன துன்பத்தை அடைவானோ) அது போல, கருப்ப ஆசயப் பை-கருப்ப மிருக்கும் பையானது, உறுத்துதலால்-அமிழ்த்தலினாலே, இடர்ப்பட்டு அழியும்-(மநம்) அழிந்து துக்கத்தை யடையும்; மன்ற-நிலை யாக உள்ள, உததி மறிந்து ஆழ்வான்-சமுத்திர (ஜலத்தில்) அமிழ்த்தப்பட்ட ஒருவன், வருத்தம் என்ன-(அடையும்) துன்பத்தைப் போல, நின்ற-பொருந்தி

யிருக்கின்ற, கருப்ப ஆசய-கருப்பாசயப் (பையில்), உதக வெள்ளம் கொள்ள-ஜலமானது பூரித்தலினுலே, நிறை அழிந்து-(முன் தனக்குள்ள) ஞாநம் கெட்டு. வருந்தியிடும்-துக்கத்தை அடையும். (எ-று)

ஒருவன் தனை என்பதில் "தன்" ஏ அசை. 1

ஷை

சிவ தருமோத்தரம். அத் 8. கவி 22.

அங்கி யதனிற் றங்கியிடு மயோ மயத்த கும்பத்திற்,
றங்கு மொருவன் தபநம்போல் தபநமெய்துந் தாயுதரத்.
தங்கி சுடவே யழலனைய சூசி யதனு லாகத்தைப், [கும்.
பங்கித் திடவே படுமிடரி னிருநாற் குணிதம் பட்டமுங்

(இ-ள்) அங்கி யதனில்-அக்கினியில், தங்கியிடும்-வைக்கப்பட்டு (காய்ந்த), அயோ மயத்த கும்பத்தில்-இருப்புக் கடாரத்தில். தங்கும் ஒருவன் தபநம் போல்-இருத்தப்பட்ட ஒரு புருஷன் (எவ்வளவு) வேதனை (அடைவானே அது) போல. தாய் உதரத்து அங்கி சுட-மாதாவினது கருப்பத்தில் உதராக்கினி தகித்தலினுலே. தபநம் எய்தும்-தாபத்தை அடையும். ஆகத்தை-(ஒருவனது) சரீரத்தை. அழல் அனைய-அக்கினியில் காய்ச்சப்பட்ட, சூசி யதனல்-ஊசியினுலே, பங்கித்திட படும் இடரின்-குத்தினுல் (எவ்வளவு துன்பத்தை) அடைவானே அதனினும், இரு நால் குணிதம்-(மாத புசிக்கும் காரம் க்ஷார மான ஆகாரங்களினுல்) எண்



மடங்கு அதிகமான (துக்கத்தை), பட்டு அழுங்கும்-அடைந்து அழும் எ-று ஏ ஏ-அசை.
'அங்கியது" சூசியது" என்பதில். அது பகுதிப் பொருள் விகுதி. 2

ஷை

சிவ தருமோத்தரம். அத் 8. கவி 23

கருப்பா சயமே கட்டமதா மதனி னதிகங் கடுங்காலு.
முரிக்க மிகவு மோகமுற முன்னை யுணர்வு மந்நிலையே.
மரிக்க வாலைக் கரும்பெனவே யோநி வழியின் வலிதொலைய.
நெருக்கப் பட்டு நிலமிசையே தோன்று முயிரு னிலையுடனே.

(இ-ள்) கருப்ப ஆசயமே-கருப்பாசயப் பையில் கட்டுப்பட்டிருத்தலே, கட்டமது ஆம்-(மிகவும்) துன்பமாம். அதனின்-அதைக் காட்டிலும். அதிகம்-அதிகமான துன்பமாம், கடும் கால்-கொடிய (பிரசூத) வாயு, முரிக்க-(தலை கீழாக) முரித்துத் தள்ளுதலினுலே (மலை யுச்சி மீதிருந்த ஒருவனைக் கீழே தள்ளினுலெப்படித் துன்பத்தை யடைவனே அது போல). மிகவும் மோகம் உற-மிகுந்த மயக்கத்தை யடைந்து, (தன் சுவாதீந மின்றி). முன்னை உணர்வும்-முன் (தனக்கிருந்த) ஞாநமும். அந் நிலையே மரிக்க-அப்பொழுதே நாசமடையவும். ஆலை கரும்பு என-ஆலையி லிட்ட கரும்பு (ரசம் வேறு செய்தவுடன் சக்கை பல மில்லாதது)

போல, யோசி வழியின்-யோகித் துவாரத்தினுல், வலி-தொலைய-(தனக்குள்ள)பல மெல்லாங் குன்ற, நெருக்கப் பட்டு-நெருக்கத்தை யடைந்து, உயிர்-ஜீவன், ஊன் நிலையுடன்-மாம்ச பிண்ட மான சரீரத்தோடு, நிலம் மிசை-பூமியின் மேல், தோன்றும்-பிறக்கும். (எ-று)

ஏ-ஏ-ஏ அசை. காலு என்பதில் உகரம் சாரியை.

"கட்டமது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

3

ஷ

குறுந் திரட்டு (நிலையாமை 7)

பரண மாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டுதங்
கையிற்றந்த,
விரண மானவை கொண்டிட விவரைவிட் டியம்பிடா
திவணேகு,
மரண வேதனை யாவரா லறியலா மயங்கியைம்
புலனந்தக்,
கரணம் யாவையுங் கலங்கிட வருந்துயர் கடவுளே
யறிகிற்பான்,

(இ-ள்) பரணம் ஆகிய-(தன்னுல்) காப்பாற்றப் பட்ட, பெண்டிரும்-பெண் ஜாதியும், சுற்றமும்-சுற்றத்தவர்களும், பண்டு-பூர்வம், தம் கையில் தந்த-தன்னிடம் கொடுத்திருந்த, இரணம் ஆனவை-கடனை, கொண்டிட-வாங்கிக் கொள்ள, இவரை விட்டு-இந்தப் பெண் ஜாதி சுற்றத்தார் முதலியோரைப் பிரிந்து, இயம் பிடாது-(இவர்களிடம்) சொல்லிக்கொள்ளாது, இவண் ஏகும்-இச் சரீரத்தி லிருந்து (பிரிந்து ஜீவன்) செல்லு



கின்ற, மரண வேதனை-மரண துக்கத்தை, யாவரால் அறியல்ஆம்-எவரால் அறிந்து (சொல்ல) முடியும், ஐ புலன்-பஞ்ச இந்திரியங்களும், மயங்கி-(தத்தங் கோளகங்களி லிருந்து விஷயங்களை யறிய முடியாது)மயக்கத் தையடைந்து, அந்தக்கரணம் யாவையும்-மநம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலான எல்லாம், கலங்கிட-கலக்கத்தை யடையும்படியாக, வரும் துயர்-வரப்பட்ட துன்பத்தை, கடவுளே-பரம சிவனே, அறிகிற்பான்-அறிவார். (மற்றவர்களால் அறிதல் கூடாது). (எ-று) 4

ஷ

சிவ தருமோத்தரம். அத் 8. கவி 86.

தநத்தினை மனைதனைத் தாநி யந்தனை,
நினைத்தினி யெவரநு பவிப்பர் நீங்குநா,
ளெனக்கிவை யந்நிய மாகு மேயெனு,
மநத்துயர் மலியவே மாயு மாவியே. 5

(இ-ள்) தந்தினை-ஐசுவர்யத்தினையும், மனை,தனை-வீடு முதலியவற்றையும், தாநியம் தனை-தாநியங்களை யும், நீங்கு நாள்-விட்டுப் (பரலோகம்) போகும் பொழுது, நினைத்து-நினைத்துக் [சொண்டு], இனி எவர் அநுபவிப்பர்-மேல் யாவர் [இவைகளை] அநுபவிப்பார் கள், எனக்கு-எனக்கு, இவை-இந்தத் தநம், வீடு, சுற்றம், தாநியம் யாவும், அந்நியம் ஆகும்-வேருகும், எனு-என்று கருதி, மநம் துயர்-மநத்தில் துக்கம், மலிய-அதிகரிக்க, ஆவி மாயும்-பிராணன் போகும். [எ-று]

'மனே தனே' 'தாங்கியந்தனே' என்பவற்றின், தன்-தன் ஏ-ஏ-ஏ. அசை. 5

ஷி

## மெய்ஞ் ஞாந விளக்கம்

வந்திடு மரணத் துன்ப மறிந்துரை செய்யப் போமோ,
வுந்திமே லையும் பித்து முணர்வொடு பொறிக லங்கி,
நந்திடா விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே.
யிந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்ம டங்கே,

[இ-ள்] வந்திடும்-[கருமாதீநமாக] வாராநின்ற, மரணத் துன்பம்- மரண வேதனையை, மறித்து-[வேண்டாம் எனத்] தடுத்து, உரை செய்யப் போமோ- சொல்லக் கூடுமோ, ஐயும்-சிலேத்துமமும், பித்தும்-பித்தமும், மேல் உந்தி-மேற் கிளம்பி, உணர்வொடு-[நல்ல] ஞாந [மின்றி], பொறி கலங்கி-இந்திரியங்களும் கலக்கத்தை யடைந்து, நந்திடா-கெடாத, இருள் மூடி-[கண்கள் பஞ்சடைந்து] இருள் மயமாய், நா உலர்ந்து-நா வரட்சி யடைந்து, அலமந்து-ஐயே வென்று அலறி, என்னே-என்னே, இந்த-இந்த, மா இறப்பில்-பெரிய மரண காலத்து, துன்பம்-துக்கம், பவத் துன்பத்து-பிறக்கும் பொழு திருக்கப்பட்ட துக்கத்தைக் (காட்டிலும்,) எண் மடங்கு-எட்டு மடங்கு (அதிகமாம்). [எ-று] ஏ-ஏ-அசை. 6



ஷி

## சம்பந்த சுவாமிகள் திருக் கடைக் காப்பு

(திரு வையாறு.1)

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மே லுந்தி
யலமந்த போதாவி யஞ்சேலென் றருள்செய்வா னமருங் கோயில்,
வலம்வந்து மடவார்க ணடமாட முழவதிர மழையென் றஞ்சிச்,
சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவை யாறே.

[இ-ள்] புலன் ஐந்தும்-ஞாநேந்தியங்க ளைந்தும், பொறி கலங்கி-தத்தம் கோளகங்களி லிருந்தும் கலக்கத்தை யடைந்து, நெறி மயங்கி-வழி (தெரியாது) மயங்கி; அறிவு அழிந்திட்டு-விவேக சூநியம் ஆய், ஐ-சிலேட்டுமமும், மேல் உந்தி-(பித்தமும்) மேல் கிளம்பி, ஆவி-ஜீவன், அலமந்த போது-பீதியடைந்த காலத்து, அஞ்சேல் என்று-பயப்படாதே என, அருள் செய்வான்-கருணை பாலிக்கும் பொருட்டு, அமரும் கோயில்-(பஞ்சநதேசுவரர்) எழுந்தருளியுள்ள க்ஷேத்திரத்தை, வலம் வந்து-பிரதக்ஷிணம் செய்து, மடவார்கள்-பெண்கள், நடம் ஆட-நிர்த்தநம் செய்யவும், முழவு அதிர-(குட முழா (வாத்திய கோஷங்கள்), கோஷிக்கவும், சில மந்தி-(அதைச்) சில குரங்குகள், மழை என்று-மழை என(எண்ணி), அஞ்சி-பயந்து, அலமந்து-அலறி, மரம் ஏறி-மரங்களின் (மேல்) ஏறி, முகில் பார்க்கும்-மேகக் (கூட்டங்களைப் பார்க்கின்ற,

திரு ஐ ஆறு-பஞ்ச ஈத க்ஷேத்திரமாம். எ-று.
ஏ-அசை 7

ஷ

மெய்ஞ்ஞாந விளக்கம்.

நலமிலா மூப்புத் துன்ப' நடைதளர்ந் துரைத முத்துச்,
சலமதே மிகவுந் தோன்றித் தண்டுகண் ணுகிச் சித்தக்,
கலநமே பிறத்து கண்டார் கார்ச்சித்தங் குமிழும் வண்ணம்,
மலேவெலாஞ் செய்யு மூப்பின் வருந்துயர் அந்தோ பாராய். 8

(இ-ள்) நலம் இலா-நன்மை யின்றிய, மூப்பு துன்பம்-விருத்தாப்பியப் பருவம் துன்பமாம், நடை தளர்ந்து-(அதாவது) நடக்க (முடியாது) தளர்ச்சி யடைந்து, உரை தழுத்து- வார்த்தைகள் குளறி பேச முடியாமல், சலமது-(மல) சலம், மிகவும் தோன்றி- மிகவு மதிகரித்து, தண்டு-கோலே. கண் ஆகி-கண்ணுகக் கொண்டு, சித்தம் கலநம் பிறந்து-மந கலத்தை யடைந்து, கண்டார்-பார்ப்பவர்கள், கார்ச்சித்து-காரி, அங்கு உமிழும் வண்ணம்-அவ்விடத்தில் துப்பும்படி, மலேவு எலாஞ் செய்யும்-சகல துக்கத்தையும் கொடுக் கின்ற, மூப்பின்-வயோதிகப் (பர்வத்தில்), வரும் துயர்- வருகின்ற துக்கம் (அதிகம் ஆம்), அந்தோ-ஆச்சரியம், பாராய்- (இதை) விசாரித்துப் பார்ப்பாயாக. எ-று
"சலமது" என்பதில்' 'அது' பகுதிப் பொருள் விகுதி. 8



ஷ

மெய்ஞ் ஞாந விளக்கம்

பிணியினுல் வலியுங் கேடாம் பிணியினுல் அழகும் போகுந்,
துணிவெலாம் பிணியாற் குன்றுந் தொலேவில்வே தனேயைச் செய்யுந்,
தணிவிலா துள்ளே நின்று சாலவும் ஒறுக்கும் பொல்லாப்,
பிணியதே யொக்குந் துன்பம் பேசிடிற் பிறிதும் உண்டோ, 9

(இ-ள்) பிணியினுல்-வியாதியினுல், வலியும்-(தனக் குள்ள) சாமர்த்தியமும், கேடு ஆம்-கெட்டுவிடும், பிணி யினுல்-வியாதினுலே, அழகும் போகும்-(சரீரத் துள்ள] சௌந்தர்யமும் கெட்டுவிடும். பிணியால்-வியாதி யினுலே, துணிவு எலாம்-தைரிய முழுவதும், குன்றும், குறுகிவிடும், தொலேவு இல்-அளவிடக் கூடாத, வேதனேயை-துன்பத்தை, செய்யும்-கொடுக்கும்- தணிவு இலாது-(கொஞ்சமும்)சாந்தமில்லாமல், உள்ளே நின்று-(சரீரத்தி)னுள் ளிருந்து, சாலவும் ஒறுக்கும்- மிகவும் (எல்லாவற்றிலும்) வெறுப்பு உண்டாக்கும், பொல்லா-கொடி தாகிய, பிணியது-வியாதிக்கு, ஒக்கும் துன்பம்-சமாநமான துக்கம், பேசிடில்-சொல்லு மிடத்து, பிறிதும் உண்டோ-வே றென்றும் இருக் கிறதா (இல்லே என்றபடி) (எ-று) ஏ-அசை.
'பிணியது' என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. 9

## 12. இளமையிற் பிணியற்.

### குறுந் திரட்டு (நிலையாமை. 1).

பிறந்தவரி றத்தல்பிழை யாதெனவ றிந்தா,
ருறுந்துயரொ ழிந்தினிய வுண்ண நினை வாரோ,
மறந்துவிட யத்துமயல் உற்றிடுதல் வான்மீ,
திறந்தவரை யுச்சிவிழு வோனிடைகொள் இன்பம். 10

(இ-ள்) பிறந்தவர்-ஜநித்தவர்கள், இறத்தல்-மரித்தல், பிழையாது-தப்பாது, என அறிந்தார்-என்று உணர்ந்தவர்கள், உறும்-பொருந்தாநின்ற, துயர் ஒழிந்து-துன்பங்களினின்றும் நீங்கி, இனிய-விரும்பத்தக்க (பதார்த்தங்களை), உண்ண-புசிக்க, நினைவாரோ-நினைப்பார்களோ (எப்படி நினையார்களோ அதுபோல], மறந்து-(ஜநந மரண முன் டென்பதை) மறந்து, விடயத்து-(போக்ய)விஷயங்களில், மயல் உற்றிடுதல்-மயங்கி (அதில்)பொருந்தியிருந்தல், வான் மீது-ஆகாயத்தை, இறந்த வரை-அளாவி யுள்ள மலையின், உச்சி-சிகரத் திருந்து, விழுவோன்-(தவறி)விழுபவன், இடை கொள்-மத்தியில் கொள்ளப்பட்ட, இன்பம்-(தேனின்) சுவை போல (துக்கத்தோடு கூடிய)தாம். எ-று. 10

ஷை.

திரு வள்ளுவர். குறள். 2-13-2.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்,
நெஞ்சத்த வலமி லர். 11



(இ-ள்) நன்று-(தமக்கு) உறுதியானவற்றை, அறிவாரின்-அறிபவரைக் காட்டிலும், கயவர்-(அவற்றை அறியாத) கீழ் மக்கள், திரு உடையர்-நன்மையுடையவராவர், நெஞ்சத்து-(தமது) நெஞ்சினிடத்து, அவலம் இலர்-கவலை யில்லாமையினால். (எ-று) 11

## 13. பிறப்பிறப் புடைய.

### குறுந் திரட்டு, (சுவர்க்க நிந்தை 4.)

தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு,
நோயுண் டநங்க னுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான,
காயம் உண்டு கைதொழவேண் டுநரும் உண்டு கற்பத்தே,
மாயுந் தன்மை யுண்டானால் வானோர்க் கென்னை வளனுண்டே. 12

(இ-ள்) தீய அசுரர்-கொடிய இராக்ஷதர்களின், பகை உண்டு-விரோதம் (எப்பொழுதும்) உளது, ஆர்வம்-இராகமும், செற்றம்-துவேஷமும், மிக உண்டு-மிகவும் உண்டு, நோய் உண்டு-(நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு)வியாதியும் உண்டு, அநங்கனார் உண்டு-மன்மத விவகாரமும் உண்டு, நோய்கட்கு எல்லாம்-வியாதி முழுமைக்கும், தாய் ஆன-இருப்பிடமான, காயம் உண்டு-சரீரமும் உண்டு, கை தொழ வேண்டுநரும்-நமஸ்கரிக்கத் தக்கவர்களும், உண்டு-(அந்த தேவ லோகத்திலும்) உளர், கற்பத்து-கர்ப்ப (அந்த) த்தில், மாயும் தன்மை-இறக்குந் தன்மை,

உண்டு ஆனால்-உள தாயின், வானோர்க்கு-தேவர்கட்கு (மனிதரை விட), வளன் என்னை உண்டு-மாட்சிமை என்ன இருக்கிறது. (ஒன்றும் இன்றாம்). (எ-று) ஏ-ஏ-அசை. 12

ஷ

குறுந் திரட்டு. (சுவர்க்க நிந்தை. 1)

குருடன் புகரா மார்த்தாண்டன் குட்ட ரோகி யாமெஞ்ஞ,
புருடன் தலைநோய் புரந்தரற்குப் புயத்தில் வாதந் தக்கற்குச்,
சுரநோ யுண்டு சயரோகஞ் சோம னுக்கு நீரிழிவு,
வருணர்க் கிவ்வா றமரர்க்கு நோயுண் டுண்டே மருத்து வரும். 13

(இ-ள்) புகர்-சுக்கிராசாரியாருக்கு, குருடன் ஆம்-கண் பொட்டையாம், மார்த் தாண்டன்-சூரியன், குட்ட ரோகி ஆம்-குஷ்டரோகியாம், எஞ்ஞ புருடன்-விஷ்ணு பகவானுக்கு, தலை நோய்-(தீராத) தலை வலி யாம், புரந்தரற்கு-தேவேந்திரனுக்கு, புயத்தில் வாதம்-புஜத்தில் வாத ரோக மாம், தக்கற்கு-தக்ஷப் பிரஜா பதிக்கு, சுர நோய் உண்டு-(நிவிர்த்தியாகாத) சுர வியாதி யாம், சோமனுக்கு-சந்திரனுக்கு, சய ரோகம்-காச வியாதி யாம், வருணர்க்கு-வருண பகவானுக்கு, நீர் இழிவு-நீ ரிழிவு (வியாதி யாம்), இவ் வாறு-(ஆதலினால்) இந்தப் பிரகாரம், அமரர்க்கு-தேவர்களுக்கு, நோய் உண்டு-(சதா) வியாதிகள் உள்ளன, மருத்துவரும்-(ஆகலின் அசுவினி பாலர்களாகிய) வைத்தியர்களும். உண்டு-(தேவ லோகத்தில்) உளர். (எ-று) ஏ-அசை. 13



14. அரிது பெற்றிடினும்.

தேவி காலோத்தரம்.

ஒருபொருள்எக் காலத்தும் உளதாகிச் சிறப்பு டைத்தா,
யிருவினை யின்றி மேலாம் இன்பத்தை யளிப்ப தாகும்,
பொருவிலா விதன்மே லன்பு பொருந்திடா தாரும் உண்டே,
திருவுலா வகன்ற கல்விச் சிறந்தசான் றோர்க டாமே. 14

(இ-ள்) ஒரு பொருள்-ஏக மாகிய பரமாத்ம வஸ்து, எக் காலத்தும்-எப் பொழுதும், உளது ஆகி-இருப்பது ஆய், சிறப்பு உடைத்தாய்-மேன்மை யுடையதாய், இரு வினை இன்றி-புண்ணிய பாவ மில்லாது, மேல் ஆம்-உயர்வினை யுடைய, இன்பத்தை-ஆநந்தத்தை, அளிப்பது ஆகும்-கொடுக்கும், பொருவு இலா-ஒப்பு (உயர்வு) இன்றிய, இதன் மேல்-இந்த ஏக பரமாத்ம வஸ்துவில், அன்பு பொருந்திடாதாரும்-பிரிய மில்லா திருக்கின்றவர்களும், உண்டே-இருக்கின்றனரா? (இல்லை என்ப தாம்), திரு வுலா-உயர்ந்த இந்தப் பர மாத்ம வஸ்துவை உணர்ந்தவர், அகன்ற-பெருமித முடைய, கல்வி சிறந்த-கல்வியில் சிறப்புற் றிலங்கும், சான்றோர்கள் தாம்-பெரியோர்க ளாகும். (எ-று) தாம் அசை. 14

## 15. வினைப் பிறப் பொருவன்.

குறுந் திரட்டு

வில்விளங்கிய விண்ணவர் மிகுத்தவாழ் நாளும்,
அல்லரும்பகல் என்னுமீர் வாளினால் அரிந்து,
கொல்லும் வெங்கொடுங் கூற்றையார் குலைவுறார் குறுகின்,
நல்விருந்தென வுவந்தெதிர் கொள்ளுவான் ஞானி. 15

(இ-ள்) வில் விளங்கிய-பிரகாசம் பொருந்திய, விண்ணவர்-தேவர்கள், மிகுத்த-அதிகமா யுடைய, வாழ் நாளும்-ஆயுட் காலமும், அரும் அல் பகல்-அரிய இரவு பகல், என்னும்-என்று கூறப்பட்ட, ஈர் வாளினால்-கூர்மை யுடைய இரண்டு வாளால், அரிந்து-சேதித்து, கொல்லும்-கொல்லாநின்ற, வெம் கொடும்-வெவ்விய கொடிய, கூற்றை-இயமனை (க் கண்டவுடன்), யார்-யாவர், குலைவுறார்-நடுக்கம் அடையாதவர் (ஒருவரும் இலர்). குறுகின்-(யமன்) சமீபித்தால், ஞானி-ஞானி (ஒருவனே), நல் விருந்து என-நல்ல விருந்து (வந்தது) என்று, உவந்து-சந்தோஷித்து, எதிர் கொள்ளுவான்-எதிர் சென்று அழைப்பான். (எ-று) 15

## 19. ஈதலே யறமு

(திருவள்ளுவ மாலை. வணக்கஞ் சாகரனார் 43)

ஆரியமுஞ் செந்தமிழும் ஆரய்ந் திதனினிது,
சீரியதென் றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்,



வேதமு டைத்துத்த மிழ்திரு வள்ளுவனா,
ரோதுகு றட்பாவு டைத்து. 16

(இ-ள்) ஆரியமும்-சமஸ்கிருதமும், செந்தமிழும்-சுத்தத் தமிழ் பாஷையும், ஆராய்ந்து-விசாரித்து (ஆராய்ச்சி செய்து), இதனின் இது-இவ் விரண்டுள் இது, சீரியது-உயர்வுடையது, என்று-என்று, ஒன்றை-ஒன்றை, செப்ப அரிதால்-சொல்ல முடியாத காரணத்தினால், ஆரியம்-சமஸ்கிருதத்தில், வேதம் உடைத்து-வேதம் கூறப்பட்டுள்ளது, தமிழ்-தமிழில், திரு வள்ளுவனார்-திரு வள்ளுவ நாயனாரால், ஓது-சொல்லப்பட்ட, குறள்பா உடைத்து-(ஆயிரத்து முந்நூற்று முப்பது) குறள் பாக்களாக உடையது. (எ-று) 16

## 19. ஈதலே யறமு.

திருவள்ளுவ மாலை (வெள்ளி வீதியார்) 23.

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த,
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா,
வதற்குரியார் அந்தணரே ஆராயின் ஏனை,
யிதற்குரியர் அல்லாதார் இல். 17

(இ-ள்) செய்யா மொழிக்கும்-ஜீவர்களா லாக்கப் படாத சமஸ்கிருத (வேத) த்திற்கும், திரு வள்ளுவர் மொழிந்த-திருவள்ளுவரால் (தமிழில்) சொல்லப்பட்ட, பொய்யா மொழிக்கும்-குறள் பாவுக்கும், பொருள் ஒன்றே-அர்த்தம் ஒன்றே யாகும், அதற்கு உரியார்-

அவ் வேத அத்தியயநத்துக்கு உரியவர், அந்தணரே-பிரம்மணர்களே யாவர், ஆர் ஆயின்-விசாரிக்கின். ஏனை-(வேதம்) ஒழிந்த?, இதற்கு உரிய-இந்த (தமிழிலுள்ள வேத மாகிய) குறளுக்கு உரித்தானவர், அல்லாதார் இல்-அல்லாதவர்க ளில்லை (எல்லார்க்கு முரியதாம்) (எ-று) 17

22. விடையதூ ரிறையே,

அஞ்ஞ வதைப் பரணி (ஞாந விநோதன் படைச் செருக்கு) 48

அத்தனொ டன்னைக் கன்புசெய் கின்றுர்.
அளவில் பிறப்புற் றவையவை தோறும்,
எத்தனை தாயுந் தந்தையும் உற்றுர்,
இத்தனை அன்றே விவர்களும் இங்கே. 18

(இ-ள்) அத்தனொடு-பரமேசுவரனோடு. அன்னைக்கு-பார்வதி தேவிக்குச் (சமாநமாக பிதா மாதாக்களுக்கு), அன்பு செய்கின்றுர்-பக்தி புரிகின்றுர்கள், அளவு இல்-அளவிட முடியாத, பிறப்பு உற்று-பிறவியை அடைந்து, அவை அவை தோறும்-அந்த அந்த ஜந்மங்கடோறும், எத்தனை-எவ்வளவு, தாயும் தந்தையும்-மாதா பிதாக்களை, உற்றுர்-அடைந்தார்களோ, இங்கு-இவ்விடத்து, இத்தனை அன்றே-இத்தத் தன்மையினை அல்லவா, இவர்களும்-இந்த மாதா பிதாக்களும் (அடைகின்றுர்கள்.) எ-று. ஏ-அசை. 18



24. வேண்டி னுண்டாகத்.

திரு மங்கை ஆழ்வார் பெரிய திரு மொழி திரு வதரி 2.

திவ்யப் பிரபந்தம்.

முதுகு பற்றிக் கைத்த லத்தான் முன்னொருகோல் ஊன்றி,
விதிர்வி திர்த்துக் கண்சு ழன்று மேற்கிளைகொண் டிருமி,
யிதுவென் னப்பர் மூத்த வாறென் றிளையவரே சாமுன்,
மதுவுண் வண்டு பாடுஞ் சோலை வதிரிவணங் குதுமே. 19

(இ-ள்) முதுகு பற்றி-(ஒரு-கையால்) முதுகைப் பிடித்துக் கொண்டு, கை தலத்து-(ஒரு) கையினுல். முன் ஒரு கோல் ஊன்றி-(தனக்கு) முன்னே (மூன்ருங் காலாக) ஒரு கோலை யூன்றிக் (கொண்டு), விதிர் விதிர்த்து-(சரீரம்) நடுக்க முற்று, கண் சுழன்று-கண்களுக்கு பூமி சுழலுவது (போல் தோன்றிப் பஞ் சடைந்து), மேற் கிளை கொண்டு-(வீணையின் நரம்பு ஓசை போல) மேல் மூச்சு அடைந்து, இருமி-(கக் கக் கென) இருமி, இது என் அப்பர்-இவர் என் தகப்பனுர், மூத்த ஆறு-(எங்கட்கு) முதியவர், என்று-என, இளையவர்-சிறு பிள்ளைகள், ஏசா முன்-வையு முன்னரே, மது உண்-தேனைக் குடித்து, வண்டு பாடும்-வண்டுகள் (ரீங்காரம்) செய்கின்ற, சோலை-சோலைக ளடர்ந்த (பதரிகாசிரமத்தில்), வதிரி வணங்குதும்-பத்திரி (நாராயணரை) சேவிப்போம். எ-று. ஏ-அசை. 19

## 24. வேண்டி னுண்டாகத்.

திரு மங்கை ஆழ்வார் பெரிய திரு மொழி திரு வதிரி. 5

திவ்யப் பிரபந்தம்.

பண்டு காமர் ஆன ஆறும் பாவையர்வாய் அமுதம்,
உண்ட ஆறும் வாழ்ந்த ஆறும் ஒக்கவுரைத் திருமித்,
தண்டு காலா வூன்றி மெள்ளத் தள்ளிநட வாமுன்,
வண்டு பாடுஞ் சோலை சூழ்ந்த வதிரிவணங் குதுமே. 20

(இ-ள்) பண்டு-முன்னம், காமர் ஆன ஆறும்-காமுக ஞக விருந்த முறையையும், பாவையர்-பெண்களது, வாய் அமுதம்-வாயின் எச்சலை, உண்ட ஆறும்-குடித்த முறையையும், வாழ்ந்த ஆறும்-(தான் யௌவனப் பருவத்தில்) வாழ்ந்தவற்றையும், ஒக்க உரைத்து-ஒருமிக்கச் சொல்லி, இருமி-(சொல்லும் போதே கக்கக் கென) இருமி, தண்டு-கோலை, காலா-(முன்ருங்) காலாக, ஊன்றி-ஊன்றிக் (கொண்டு), மெள்ள-மிருது வாக, தள்ளி-தத்தளித்து, நடவா முன்-நடக்கும் (கிழப் பருவம் வரும்) முன்னரே, வண்டு பாடும்-வண்டுகள் (ரீங்காரம்) செய்கின்ற, சோலை சூழ்ந்த-சோலைகளடர்ந்த, வதிரி-பதரிகாசிரமத்தில் (எழுந்தருளியுள்ள ஸ்ரீமந் நாரயண) மூர்த்தியை, வணங்குதும்-சேவிப்போமாக. எ-று. ஏ-அசை. 20

## 27. பிறந்தவப் பொழுதே.

சிவ தருமோத்தரம். 8-20.

இறந்தே முனமே யினிப்பிறப்போம் என்றும் இந்த



முறையினியாம்,
பிறந்த பொழுதே பிறவாத பெருமை யுடைய பிஞ்ஞகனை,
யறிந்தே அவலப் பிறப்பிறப்பை அறுத்து விடுவோம் அவனருளாற்,
செறிந்தே குரவன் றிருவடியைத் திகழ்ந்த வேதா கமந்தெருண்டே. 21

(இ-ள்) முனம் இறந்தேம்-முன்னம் மரித்தேம், இனி பிறப்போம்-மேல் பிறக்கப் போகின்ருேம், என்றும்-எப் பொழுதும், இந்த முறை-இந்தப் பிரகாரமாகவே (பிறப்பதும் இறப்பது மாக விருக்கின்ருேம்), இனி யாம்-இனி மேல் நாம், பிறந்த பொழுதே-(பூமியில்) ஜெநித்த அந்த க்ஷணமே, குரவன்-ஆசிரியரது, திரு அடியை-திரு வடிகளை, செறிந்து-அடைந்து, திகழ்ந்த-விளங்காநின்ற, வேத ஆகமம் தெருண்டு-வேதம் ஆகமம் (முதலிய சாஸ்திரங்களை) அறிந்து, அவன் அருளால்-அந்த ஆசிரியனது கிருபையால், பிறவாத-ஜநந மில்லாத, பெருமை உடைய-மகிமையினை யுடைய, பிஞ்ஞகனை-பரமேசுரனை, அறிந்து-உணர்ந்து, அவல-சவலமா யுள்ள, பிறப்பு இறப்பை-ஜநந மரணத்தை, அறுத்து விடுவோம்-நிவிர்த்தித்துக் கொள்ளுவோம். (என்று சிந்தித்துக் கொண்டு சிசு கர்ப்பத்தி லிருக்கும்). எ-று. ஏ ஏ ஏ ஏ அசை. 21

## 27. பிறந்த வப் பொழுதே.

கூர்ம புராணம்.

ஈங்கிவைபி றழ்ந்துவரும் இயாவையவை என்னிற்,

கோங்கமுலை மாதரொடு கூடுவதன் முன்னம்,
ஓங்கியசந் நாசியென வுற்றிடலும் ஆகுந்,
தீங்கெறிமெய்ஞ் ஞாநநெறி சிந்தைநிலை பெற்றால். 22

(இ-ள்) ஈங்கு-இவ்விடத்து, இவை-ஆசிரமங்கள், பிறழ்ந்து வரும்-(மாறி மாறி) பிறழ்ந்து வந்து கொண்டிருக்கும் (ஆகலின்), அவை யாவை என்னில்-அது யாதெனில், கோங்க முலை மாதரொடு-கோங்கு (அரும்பு போன்ற) தநங்களை யுடைய பெண்களோடு, கூடுவதன் முன்னம்-சேரு முன்னரே (கல்யாணம் செய்யுமுன்னரே பிரமச்சாரியாக இருக்கும் போதே), தீங்கு எறி-பாபங்களைத் தகித் தொழிக்கின்ற, மெய் ஞாந நெறி-ஆத்ம ஞாநத்தின் வழியில், சிந்தை-மநது, நிலைபெற்றால்-ஏகாக்கரத் தன்மையோடு நிலைத்திருக்கு மாயின், ஓங்கிய-உயர்வு உடைய, சந்நாசி என-சந்யாசி என்று (சொல்லும்படி), உற்றிடலும் ஆகும்-பொருந்தி யிருத்தலு மாகும். எ-று. 22

## 27. பிறந்தவப் பொழுதே.

கூர்ம புராணம்.

இல்லறமு யன்றுகடன் மூன்றுமினி தீந்தால்,
அல்லலற மேவுமெதி யாகியமர் கிற்பார்,
முல்லைநகை மாதர்கடி முற்றியதி நத்தின்,
ஒல்லையெதி யாகியுணர் வுற்றிடலு மாமால். 23



(இ-ள்) இல் லறம் முயன்று-கிருகத்தி லிருந்து (கிரகஸ்த தருமத்தை வழுவாது) செய்து, கடன் மூன்றும்-தேவ கடன் பிதிர் கடன் மநுஷ்ய கடன் (ஆகிய) மூன்றும், இனிது ஈந்தால்-கிரமமாகச் செய்து முடித்தார்க ளாயின், அல்லல் அற-(யா தொரு) துன்பமுமின்றி, மேவும்-பொருந்தி யுள்ள, எதி ஆகி-சந்யாசியர்ய், அமர்கிற்பார்-இருப்பார்கள், முல்லை நகை-முல்லைப் பூ போன்ற பற்களை யுடைய, மாதர்-பெண்களை, கடி முற்றிய திநத்தில்-மணம் செய்த அந்த க்ஷணத்திலேயே, ஒல்லை எதி ஆகி-முன் சொன்ன சந்யாசி யாகி, உணர்வு-(ஆத்ம) ஞாநத்தை, உற்றிடலும் ஆம்-பொருந்துதலும் கூடும். எ-று. ஆல் அசை. 23

## 30. திரிவித வுலகத் தரிதொரு.

பகவற் கீதை (பரமார்த்த தரிசநம்) 12–4.

காரண மிறந்தொன் றிற்குங் காட்சியிற் படாத தொன்றைச்,
சேர்பவர் வருத்தம் வேறு செப்பிடல் ஆவ தன்றால்,
ஓர்வரி திதுதான் வாழும் உயிர்களால் ஆவ தொன்றே,
ஆரவர் பெருமை தன்னை யளவறுப் பவர்கள் ஐயா. 24

(இ-ள்) காரணம் இறந்து-(தனக்கு) ஒரு காரணமுமில்லாமல், ஒன்றிற்கும்-(அந்த ரிந்திரிய பகிரிந்திரியங்களுள்) ஓர் இந்திரியத்திற்கும், காட்சியில்-படாதது (தனது அறிவில்)-விஷயமாக அகப்படாத தான,

ஒன்றை-நிர் விசேஷ அக்ஷர தத்துவத்தை, சேர்பவர் வருத்தம்-அடையாநிற்பவரது கிலேச மானது, வேறு செப்பிடல் ஆவது-மற்றைக் (கிலேசங்களோடு சேர்த்துச்) சொல்லுதல், அன்று-அல்ல (அதிகதர மான கிலேச மாம்), ஓர்வு அரிது இது தான்-(நேத்திராதி இந்திரியங்களினுல்) அறிதற் கரிதான பிரஹ்ம விஷயமான இந்நிஷ்டை தான், வாழும் உயிர்களால்-அகந்தை மமதை ரூப), தேக அபிமாநமுடைய மநுடரால், ஆவது ஒன்ரே-(கிலேச மில்லாமல்) அடையக் கூடியதா? (என்ருல் அன்று), அவர் பெருமை தன்னே-(அடைந்திடின்) அவரது மகிமையை, ஐயா-அர்ச்சுநா!, அளவு அறுப்பவர்கள்-வரையறுத்துச் சொல்லக் கூடிய சமர்த்தர், ஆர்-யாவர் (ஒருவரு மிலர்), எ-று. 'ஆல்' அசை. 24

31. வருத்த மொன் றின்றி.

பிரம கீதை 9-13.

ஆதலா லறியு மறிவெலாங் கைவிட் டறிவினுக் கறிவதாய் நின்ற,
பேதமில் பிரம மொன்றுமே யறிவான் பேறுபே ரின்பமாம் பிறத்தல்,
சாதலற் றிருக்கு மதனையோர் வருத்த மின்றியே சாரலா யிருக்க,
வாதரித் தறியா ரற்பமே விரும்பி யநந்ததுக் கத்திலே யமைவார். 25

(இ-ள்) ஆதலால்-ஆகையிஞல், அறியும்-(திருசிய



ரூபமாக) உணராநின்ற, எலா அறிவும்-சகல திருசிய விஷயங்களேயும், கை விட்டு-அத்தியந்த மொழித்து, அறிவினுக்கு-ஜீவனுக்கு, அறிவது ஆய் நின்ற-ஆன்மாவா யிருக்கப்பட்ட, பேதம் இல்-(ஒன்ருலும்) பேதிக்கப்படாத, பிரமம் ஒன்றுமே-ஏக ரூப மான பிரமமே, அறிவான்-உணருபவன், பேறு-அடைவது, பேரின்பம் ஆம்-பிரமாநந்தமேயாம், பிறத்தல்-ஜநித்தல், சாதல்-மரித்தல், அற்று இருக்கும்-இன்றி யிருக்கின்ற, அதனே-அந்த நிர்விஷய பிரமத்தை, ஓர் வருத்தம்-யாதொரு வருத்தமும், இன்றி-இல்லாமல், சாரலாய் இருக்க-அடைய வேண்டிய திருக்க, ஆதரித்து-விசாரித்து, அறியார்-உணராத அஞ்ஞாநிகள், அற்பமே-நைசுவர மாகின்ற போகங்களே, விரும்பி-இச்சித்து, அநந்த-நாநாவித மான, துக்கத்திலே-துன்பக் கடலிலே (மூழ்கி), அமைவார்-வருத்தப்படுவார்கள். எ-று. ஏ-அசை. 25

33. ஞாநியே யெவரும்.

சமாதி.

ஒழுக்கமே புரிந்தோ ஞத லதனைவிட் டொழித்தோ ஞத,
விழுக்கஞ்செய் மூர்க்க ஞதல் பண்டித ஞதெலண்ணில்,
பழிப்பறு ஞாநந் தன்னின் முயல்பவன் பணியத் தக்கோன்,
ரெழத்தகு ஞாநி யென்று சொல்லவேண் டுவது முண்டோ. 26

(இ-ள்) ஒழுக்கமே-சீலம் (ஒன்றையே), புரிந்

தோன் ஆதல்-அநுஷ்டிப்பவனாக விருந்தாலும், அதனை விட்டு-அவ் வொழுக்கத்தை விட்டு, ஒழிந்தோன் ஆதல்-நீங்கினவ னாக விருந்தாலும், இழுக்கம்-(பிறர் பழிக்கும்படியான) பாவத்தை, செய்-செய்கின்ற, மூர்க்கன் ஆதல்-மூர்க்கத் தன்மை யுடையவ னாக விருந் தாலும், பண்டிதன் ஆதல்-வித்துவா னாக விருந்தாலும், எண்ணில்-விசாரிக்கு மிடத்து, பழிப்பு அறு-நிந்தை யின்றி (யிருக்கப்பட்ட), ஞாநம் தன்னில்-(ஆத்ம) ஞாநத்தின்கண், முயல்பவன்-அப்பியாசிப்பவன், பணியத்தக்கோன்-(அனைவராலும்) பூசிக்கத்தக்கவ னவன், ஞாநி-(ஆகையினால் ஆத்ம ஞாந மடைந்த) ஞாநியை, தொழத் தகும்-வணங்க வேண்டிய தவசியம், என்று-என்று, சொல்ல வேண்டுவதும்-சொல்ல வேண்டு வதும், உண்டோ உண்டோ (சொல்லாமலே வணங்க வேண்டும் என்பதாம்). எ-று. உம் எச்சவும்மை. 26

### 33. ஞாநியே யெவரும்.

மெய்ம் மொழி—சமாதி.

பலன்கள் வேண்டிய பரிசெலாம் பலித்திடும் பரமதத் துவஞாநி,
நலங்கொ ளுமமா மத்திரஞ் செபித்திட நயந்தவ னீராடுஞ்,
சலங்கொ டீர்த்தமா மவன்றிரு மேனியே சகலதெய் வமுஞ்செவ்வாய்,
மலர்ந்த வாசக மறுபிறப் பெனவரு மயற்பிணி மருந்தாகும். 27



(இ-ள்) பரம தத்துவ ஞாநி-பிரம தத்துவத்தை (யடைந்த) ஞாநியினது, நலம் கொள்-நன்மையைக் கொடுக்கின்ற, நாமம் ஆம்-பெயராகிய, மந்திரம் செபித்திட-மந்திரத்தைச் சொல்லுவதனாலே, வேண்டிய-விரும்பிய, பலன்கள்-பிரயோஜநங்கள், பரிசு எலாம்-தன்மைகள் யாவும், பலித்திடும்-சித்திக் கும், அவன்-அந்த ஞாநி, நயந்து-விரும்பி, நீர் ஆடும் சலம்-ஸ்நாநம் செய்த நீரே, கொள்-கொள்ளத் தக்க, தீர்த்தம் ஆம்-(கங்கை யமுனை முதலிய புண்ணிய) தீர்த்தங்களாம், அவன்-அந்த ஞாநியின், திரு மேனியே-திவ்ய மங்கள சரீரமே, சகல தெய்வமும்-சர்வ தேவதை களுமாம், செவ் வாய்-(அந்த ஞாநியின்) திவ்ய வாக்கி னின்றும், மலர்ந்த-வரப்பட்ட, வாசகம்-சொற்களே, மறு பிறப்பு-புநர் ஜெநநம், என-என்று, வரும்-வரப் பட்ட, மயல்-அஞ்ஞாந மாகிய, பிணி-வியாதிக்கு, மருந்து ஆகும்-ஔடத மாகும். எ-று. 27



### 33. ஞாநியே யெவரும்.

மெய்ஞ் ஞாந விளக்கம்

பிறிவி லாதாபி ரமபீ சன்னுட,
விறுதி யாவருந் றீன்டிடி லெங்கனு,
மறுகி விற்றிடை கோடிய நலதாய்ச்
செறிவு செய்யுமத் தேசமென் றோதிறு 28

(இ-ள்) பிறிவு-வேறுபடுதல், இலாத-இல்லாத, பிரம பீசன்-பிரம வித்தினது, உடல்-சரீரத்தை, இறுதியா-முடிவில், அநல்-அக்நியில், தீண்டிடில்-வைத்துக் கொளுத்தப்படுமாயின், எங்கணும்-எவ்விடங்களிலும், மறுகி-பரவி, விற் கிடை-விற் கிடக்குந் தன்மையாக (ஆகாய மளாவ என்றபடி), கோடி அநல் அது ஆய்-கொடிய அக்நியாகி, செறிவு-நெருங்கிப் பற்றி, செய்யும்-(எரியச்) செய்யும், அத் தேசம்-அந்த நகரத்தை, என்று-என, ஓதினர்-(பெரியோர்.) கூறியுள்ளனர். எ-று. 28

## 33. ஞாநியே யெவரும்.

### மெய்ஞ் ஞாந விளக்கம்.

முன்னமே பாகமா மூரல் செய்யுநாட்,
பின்னரும் வேவவேண் டிடுமோ பேசிடா,
யன்னதே யிவ்வுட லறிவா லட்டது,
பின்னினிச் சுடுவது பிழையே யாகுமால். 29.

(இ-ள்) முன்னமே-முதலிலேயே, பாகம் ஆம்-பக்குவமாகி யுள்ள, மூரல்-சாத மானது, செய்யும் நாள்-(போசநம்) செய்யும் காலத்து, பின்னரும்-மீண்டும் (அக்நியில்), வேவ வேண்டிடுமோ-வேக வைக்க வேண்டுமோ, பேசிடாய்-சொல்லுவா யாக, அன்னது-அது (போலவே), இவ் உடல்-இந்தச் சரீரம், அறிவால்-(ஞாந) அக்நியினால், சுட்டது-(முன்னமே)



சுடப்பட்டிருக்கின்றது, பின்-(ஆகலின்) சரீர முடிவில், இனி-மீண்டும், சுடுவது-(நெருப்பில் வைத்துக்) கொளுத்துவது, பிழையே-குற்றமே, ஆகும்-ஆம். எ-று. ஏ-ஆல்-அசை. 29

## 36. யோகசா தனையால்.

### குறுந் திரட்டு.

அண்டமெண் டிக்கெங் கண்ணு மடங்கச்சூ நியம தாகக்,
கண்டுகொண் டிருக்கக் கண்ட கருத்தையு மறவே விட்டா,
லண்டமெண் டிக்கெங் கண்ணு மாய்நின்ற வாநந் தத்தைக்,
கண்டுகொண் டிருக்கும் வண்ணங் கணத்தில்வந் துதிக்கு மன்றே. 30

(இ-ள்) அண்டம்-(பிரம) அண்டமும், எண் திக்கும்-எட்டுத் திக்குகளும், எங்கண்ணும்-(கீழ் மேல் மற்ற) எல்லா விடங்களிலும், சூநியமது ஆக-சூநிய ரூப மாய், அடங்க-லயிக்க, கண்டு கொண்டு-பார்த்துக் கொண்டு, இருக்கக் கண்ட-இருக்கப் பார்த்த, கருத்தையும்-மநத்தையும், அறவே-அத்தியந்தம், விட்டால்-நீக்கினால், அண்டம்-(பிரம) அண்டமும், எண் திக்கு-எட்டுத் திக்குகளும், எங்கண்ணும்-(கீழ் மேல் மற்ற) எல்லா விடங்களிலும், ஆய்-ஆக, நின்ற-இருக்கப்பட்ட, ஆநந்தத்தை-ஆநந்தத்தை, கண்டு கொண்டு-பார்த்துக் கொண்டு, இருக்கும் வண்ணம்-

இருக்கும்படி, கணத்தில்-க்ஷண நேரத்தில், வந்து உதிக்கும்-(ஆநந்த ரூப விருத்தி) வந்து தோன்றும். எ-று. அன்று ஏ-அசை. 'கருத்தையும்' என்ற உம்மை எச்சப் பொருட்டு. 30

## 37. ஐம்புல னடல்வேண்.

### தேவிகாலேத்தரம்.

துக்கசுக மாசைவெறுப் பென்று கூட்டுந்
துவந்துவங்க ளிரண்டவைபோற் சொல்லப் பட்ட,
மிக்கதெய்வ மடவார்க டன்மா தன்ம
மெய்ப்பலன்கள் வேறுவே றுளவா மன்றே,
தொக்கவுள மதுவாக்கும் பிறப்பை யாக்குந்
தொடர்பெனவே துணிந்தந்தத் தொடர்பை யாக்குந்,
தக்கபொருட் சார்புயிர்ச்சார் படைய நீக்குந்
தவத்தார்பாற் சிவம் வந்து சாருங் காணே, 31

(இ-ள்) துக்கம் சுகம்-துக்கமும், சுகமும், ஆசை வெறுப்பு-இராகமும், துவேஷமும், என்று கூட்டும்-என்று தொகுக்கின்ற, துவம் துவங்கள்-இரண்டு இரண்டாகச் சொல்லப்பட்ட, இரண்டு-இரு வினைகளாம், அவை போல்-அது போலவே, சொல்லப்பட்ட-சொல்லா நின்ற, மிக்க-(சிரேஷ்டம்) மிகுந்த, தெய்வ மடவார்கள்-அப்சர ஸ்திரி முதலியனவும், தன்ம அதன்மம்-புண்ணிய பாவமும், மெய்ப் பலன்கள்-(அவைகளால் வரப்பட்ட) உண்மையான பலன்களும், வேறு வேறு



உள ஆம்-பின்ன பின்ன மாக இருக்கின்றன, தொக்க-கூட்டமா யுள்ள, அது-அவைகளே, உளம் ஆக்கும்-மநதைப் பிரேரிப்பித்து, பிறப்பை ஆக்கும்-ஜன்மத்தைக் கொடுக்கும், தொடர்பு என-சம்பந்தம் என்று துணிந்து-நிச்சயித்து, அத் தொடர்பை-அத்தச் சம்பந்தத்தை, ஆக்கும்-உண்டாகச் செய்கின்ற, தக்க-தகுதியாக உள்ள, பொருள் சார்பு-பொருள் பற்றையும், உயிர் சார்பு-உயிர்ப்பற்றையும், அடைய-அத்தியந்தம், நீக்கும்-நிவிர்த்திக்கின்ற, தவத்தார்பால்-(மகா) தவசிகளிடத்து, சிவம் வந்து சாரும்-பரம சிவம் வந்து பொருந்தும். எ-று. காண்-ஏ-அன்று-ஏ-ஏ-அசைநிலைகள் 31

## 39. இருவகைச் சார்பா.

### சமயாசாரம்.

புத்திரர் மனையா ளாதிப் புறச்சுற்றப் பற்று நீக்கி,
யித்திரண் மலவு டம்பா மிடைச்சுற்றப் பற்றும் விட்டே,
யொத்துயிர் விடாத பாசக் கரணவுட் சுற்று மோய்த்துத்,
தத்துவ மாயி ருத்த றவத்தவர் சரிதை யையா. 32

(இ-ள்) ஐயா-அய்யனே, புத்திரர்-புத்திரர்கள், மனையாள்-பெண் சாதி, ஆதி-முதலிய, சுற்றம் புறப்பற்றும்-சுற்றத்தா ராகிய வெளியா யுள்ள பற்றுக்களையும், நீக்கி-விட்டு, இ திரள்-இந்த கூட்டமா யுள்ள, மல உடம்பு ஆம்-மல மய மான சரீரம் ஆகிய, இடை சுற்றம்-மத்தியமான சம்பந்த, பற்றும்-அபிமாநத்தை,

யும், விட்டு-தொலைத்து, உயிர் ஒத்து-ஜீவனோடு சம்பந்தித்து, விடாத-நீங்காத, பாச-பாசமாகிய, கரண உள் சுற்றும்-அந்தக்கரண மாகிய உள் பற்றுக்களையும், ஒய்த்து-கெடுத்து, தத்துவம் ஆய்-பிரம ரூப மாக, இருத்தல்-இருப்பதே, தவத்தவர்-மகான்களது, சரிதை-தன்மையாம் (விருத்தாந்தமாம்) எ-று. ஏ-அசை. 32

## 42. முள்ளில்சில் கொடிவேர்.

ஞாந வாசிட்டம், சுரகு கதை. 5-7-22.

வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மநதுக் கிவ்வுலக
வியாபாரங்கள். செம்புகர்வே ழத்தினுக்கான் குழப்படி
போற் றோன்றுமா றீந நெஞ்சுக், கம்புவியிற் றொழில்
சிறிதே யாயினுநீந் திடவரிதா மாவின் பாதப், பைம்பு
னலுங் கிழக்கொதுகுக் கெல்லைகரை காணாத பரவை
யன்றோ. 33

(இ-ள்) வெம்புதல் போய்-(மநதி லுள்ள) இராக (மெல்லாம்) நீங்கி, தண் என்ற-சீதளத் தன்மையோடு கூடிய, உன் மநதுக்கு-உன்னுடைய மநதிற்கு, இவ் உலக-இந்த ராஜ்ஜியத்தின், வியாபாரங்கள்-விவகாரங்கள். செம் புகர்-சிவந்த புள்ளிகளை, உடைய, வேழத்தினுக்கு-யானைக்கு, ஆன்-ஆவினது, குளப்பு அடி போல்-குளம்பின் அடி போல (அற்பமாக), தோன்றும்-(உனக்கு) தோன்றும், நீந நெஞ்சுக்கு-அல்ப மநதிற்கு, அம் புவியில்-இப் பூலோகத்தில், தொழில்-கிரியை, சிறிதே ஆயினும்-கிஞ்சித் மாத்திர மிருப்பினும், நீந்திட



அரிது ஆம்-(அதில் நின்றும்) தாண்ட முடியாதாம். (எது போல வெனின்), ஆவின்-பசுவினது, பாதம்-குளப்படியி லிருக்கப்பட்ட, பைம் புனலும்-பசிய ஜலமும், கிழக் கொதுகுக்கு-(இறக்கையின்றிய) கிழட்டுக் கொதுகுக்கு, எல்லை-அளவையும், கரை-கரையையும், காணாத-அரிய முடியாத, பரவை அன்றோ-சமுத்திரம் போல வாகும் (அது போல வாம்). எ-று ஆல்-அசை. 33

## 43. விடத்தகு மகப்பற் றினை.

தேவிகாலோத்தரம்.

சமயா சார சங்கற்ப விகற்பமு,
மமையா தாங்குல வாசார மானது,
மிமையா தாரும் விடாதவில் வாழ்க்கையு,
மமையார் தோளாய் விடுதலா சாரமே. 34

(இ-ள்) அமை ஆர் தோளாய்-மூங்கில் போத்து போன்ற தோளை யுடையவளே, சமய ஆசாரம்-(அநந்தச்) சமயங்கட்குள்ள ஆசாரங்களையும், சங்கற்பம்-சங்கல்பங்களையும், விகற்பம்-விகற்பங்களையும், அமையாது ஆம்-அவரவர் கட்குப் பொருந்துவன வின்றிய, குல ஆசாரம் ஆனதும்-குல ஆசாரங்களையும், இமையாதாரும்-இமையாத நாட்ட முடைய தேவர்களும், விடாத-விட்டு நீங்காத, இல் வாழ்க்கையும்-கிரக வாழ்க்கையையும், விடுதல்-விட்டொழிதலே, ஆசாரம்-(ஞாந) ஆசாரம் (என்று சொல்லப்படும்) எ-று.

ஏ-அசை. 'இமையாதாரும்' என்பதில், உம்மை, 'உயர்வு உடையோரும்' என மநிதரை எச்சத்தால் உணர்த்திற்று. 34.

45. சாதக தசைக்கண

தத்துவ ரத்நாகரம்.

வாக்கொடு மநமு மிறந்ததி மதுர வாரியா யொழிவற
நிறைந்து,
போக்கொடு வரவ தின்றிய வமுதைப் பூரண மாகவுண்
டவர்தாம்,
வீக்கிய கான னீரெனும் விடய மேவுற முறல்வரோ முயலி,
னேக்குறு மந்த ஞாநியு நாயு மொத்திடும் வாசியொன்
றிலதே. 35

(இ-ள்) வாக்கொடு-வாக் கிந்திரியத்துடன், மநமும்-அந்தக் கரணமும், இறந்து-நசித்து, அதி மதுர வாரி ஆய்-மிகுந்த இனிமை யுடைய சமுத்திர மாய், ஒழிவு அற-இடையீ டின்றி, நிறைந்து-பூரணமாய், போக்கொடு-போதலுடனே, வரவு அது இன்றிய-வருதலில்லாத (நித்தியமா யுள்ள), அமுதை-அமுதத்தை, பூரணம் ஆக-நிறைய, உண்டவர்-அநுபவித்தவர்கள், வீக்கிய-தோற்ற மாத்திரமா யுள்ள, கானல் நீர் எனும், கானல் ஜலத்திற்குச் சமாந மான, விடயம்-போக்கியங்களை, மேவுற-அடைய, முயல்வரோ-பிரயத்நப்படுவார்களா? (முயற்சிக்க மாட்டார்கள்), முயலின்-(அப்படி) முயற்சி செய்யின், நோக்குறும்-(விஷயங்களை) நோக்கிச் செல்லுகின்ற, அந்த ஞாநியும்-அப்படிப்பட்ட ஞாநியும், நாயும்-நாயும், ஒத்திடும்-சமாந மாம், வாசி-வித்தியாசம், ஒன்று இலது-ஒரு வகையிலும் இல்லையாம். எ-று. அது-பகுதிப் பொருள் விகுதி. தாம்-அசை. 35



45. சாதக தசைக்கண்.

குறுந் திரட்டு.

தூமங் காட்டுஞ் சுடுதழ லுண்டென் பதுதுய்ப்பார்க்,
காமங் காட்டு மயிநியு வர்ப்பப் படியேநல்
லேமங் காட்டு ஞாநிக ளென்று லிவர்நெஞ்சிற்,
காமங் காட்டும் பெற்றிலர் கற்றுர் கலையன்றே. 36

(இ-ள்) சுடு தழல்-காய்ந்த அக்நி, உண்டு என்பது-இருக்கின்றது என்பதை, தூமம் காட்டும்-புகை அறிவிக்கும், துய்ப்பார்க்கு-புசிப்பவர்கட்கு, அயிநி உவர்ப்பு-அந்நத் துவேஷமானது, ஆமம் காட்டும்-வியாதி யுள்ள தென்பதை அறிவிக்கும், அப்படியே-அது போலவே, ஞாநிகள் இவர் என்றால், இவர்கள் ஞாநிக ளென்பதை, நல்-சிரேஷ்ட மிக்க, ஏமம் காட்டும்-(அவர்களது) சந்தோஷ மறிவிக்கும், கலை-சாத்திரங்களை, கற்றுர்-படித்திருக்கின்றுர்கள் (அல்லாமல்), பெற்றிலர்-(உண்மை யான சுவாநுபூதியை) யடைந்திலர் (என்பதை), நெஞ்சில்-(அவர்கள்) மநதில் (உள்ள), காமம் காட்டும்-ஆசை அறிவிக்கும். எ-று அன்று-ஏ-அசை. 36

## 45. சாதக தரைக்கண்.

குறுந் திரட்டு.

பாய்ந்துமா வேழ மொற்றிப் பறக்குமத் தறுகண் யாளி,
தேய்ந்தழி வுறினுந் தேரை யிரையெனச் செல்லா
தாற்போ,
லாய்ந்துநன் முத்தி யின்ப மருந்திட வுற்ற நீரார்,
சாந்துயர் வரினு மொன்றித் தளர்ந்தெழா தாகி விட்டார் 37

(இ-ள்) மா வேழம்-பெரிய யானையின்மேல், பாய்ந்து-(தாவிப்) பாய்ந்து, ஒற்றி-அதன் மத்தகத்தைப் பிளந்து தின்ன, பறக்கும்-பறக்கின்ற, அத் தருகண் யாளி-அப்படிப்பட்ட கொடுங் கண்களை யுடைய யாளி யானது, தேய்ந்து-(இரை கிடைக்காமல்) வாடி, அழி வுறினும்-மெலி வடையினும், தேரை தேரையினை, இரை என-(தான் தின்னும்) இரை என்று, செல்லாது போல்-(கருதி) அதைத் தின்னு திருத்தல் போல, ஆய்ந்து-விசாரித்து, நல் முத்தி இன்பம்-நல்ல மோக்ஷா நந்தத்தை, அருந்திட வுற்ற-அநுபவிக்கப் பெற்ற, நீரார்-பெரியோர்கள், சாம் துயர் வரினும்-சாகும்படி யான துக்கம் வந்த காலத்தும், ஒன்றி-(துன்பத்தை) அடைந்து, தளர்ந்து-சோர் வுற்ற (போதும்), எழாது-சுவாநுபூதியி னின்றும் நழுவாமல், ஆகிவிட்டார்-இருப்பார்கள். எ-று.

ஆல்-அசை 'வரினும்' என்ற உம்மை இரக்கக்குறிப்பு 37



## 47. இந்திர சாலத் தொருநகர்.

ஞாந வாசிட்டம். 4-4-43.

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றுங் குடும்பபரம்
வெறும்பொய் யென்றே,
யிங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பரமபதத்
திருந்து வாழ்வாய்,
சிங்கார கந்தர்ப்ப நகரிருந்தென் சிதைவுற்றென்
றீதோ நன்றே,
பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென்
பாச மாயை. 38

(இ-ள்) வெம்-கொடிய, காதல்-ஆசை யாகிய, பெரும் பாம்பு-பெரிய சர்ப்பமானது, நெளி-நெளியப் பட்ட, புற்று ஆம்-புற்றாகிய, குடும்ப பரம்-குடும்ப பார மானது, வெறும் பொய்-அத்தியந்தம் மித்தை, என்று-என, இங்கு-இச் சம்சாரத்துள்ள, ஆசை-பற்றுக்களை, அற நீக்கி-அத்தியந்தம் நிவிர்த்தித்து, எல்லை இலா-(இத் தன்மைத் தென்று) முடிவிலாத, பரம பதத்து-பிரமாநந்த பதத்தை, இருந்து-அடைந்து, வாழ்வாய்-(இராகவா) நீ வாழ்வாயாக, சிங்கார-அலங் காரமான, கந்தர்ப்ப நகர்-கந்தர்வ பட்டணம், இருந்து என்-இருந்தா லென்ன, சிதை வுற்று என்-அழிந்தா லென்ன, தீதோ-(அது அழிவதால்) ஆபத்தோ, நன்றே-(அது இருப்பதால்) சிலாக்கியமோ (அதுபோல), பங்கு ஆன-அழ கான, மனை மக்கள்-பெண் சாதி பிள்ளைகள்,

வாழ்ந்தால்-என்-வாழ்ந்தா லென்ன, கெட்டால் என்-நாச மடைந்தா லென்ன, பாசம் மாயை-பாச மாகிய மாயை யாம். எ-று.

ஏ-அசை 'பாங்கு', 'பங்கு' என நின்றது. 38

### 49. தத்துவ முணர.

திரு மந்திரம். 2087.

விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து,
புரந்தகல் லானிழற் புன்னியன் சொன்ன,
பரந்தன்னை யோராப் பழமொழி யாள,
ருரந்தன்மை யாகவொ குங்குகின் ருரே. 39

(இ-ள்) அன்று-அக்காலத்து, நால்வாக்கு-(ஜநகர், ஜநாதநர், ஜநந்தரர், ஜநச்சுசாதர், ஆகிய) நால்வருக்காக, விரைந்து-(கைலையி னின்று) விரைவாக, மெய்ப் பதி-பூலோகத்திற்கு, சூழ்ந்து-எழுந்தருளி, புரந்த-உபதேசித்தற் பொருட்டு, கல் லால் நிழல்-கல்லால (விருக்ஷத்தின்) அடியில், புண்ணியன்-தக்ஷணமூர்த்த மாக (இருந்து), சொன்ன-உபதேசித்த, பரந்தன்னை-பிரமத்தை, ஓரா-விசாரித் தறிந்த, பழ மொழியாளர்-பழமையான மஹான்கள், உரம் தன்மை யாக-திடமான, ஒருங்குகின்ருர்-நிர்விகர்ப்ப சமாதி யடைத்தவர்கள்.

'பரம் தன்னை' என்பதில், தன்-அசை. 39



### 52. தந்தைதாய் முதலாம்.

சம்பந்த சுவாமிகள் திருக் கடைக் காப்பு திரு வாரூர் 3.

தந்தைதாய் புத்திரர் தன்னுடன் ருேன்றினுர் தார மென்னும்,
பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றி னுயே,
வெந்தநீ ருடியா ராதியார் சோதியார் வேத கீத,
ரெந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 40

(இ-ள்) தந்தை-பிதா, தாய்-மாதா, புத்திரர்-பிள்ளைகள், தன் உடன் தோன்றினுர்-தன் கூடப் பிறந்த சகோதரர், தாரம் என்னும்-பெண் ஜாதி முதலிய, பந்தம்-பந்தத்தை, நீங்காதவர்க்கு-துறவாதவர்களுக்கு, உய்ந்து போக்கு-பிழைத்தற்கு (வழி), இல் என-இல்லை என்று, பற்றினுய்-(கருதிப்) பொருந்தினுய், வெந்த-பஸ்ப மாக்கப்பட்ட, நீறு ஆடியார்-விபூதியை தரித்த வரும், ஆதியார்-முதன்மையானவரும், ஜோதியார்-பிரகாச சொருபரும், வேத கீதர்-வேதங்களால் தோத்தரிக்கப் படுபவரும், எந்தை-எமது தந்தையு மாகிய, ஆரூர் தொழுது-திரு வாரூரில் எழுந்தருளி யுள்ள தியாகேசனை வணங்கி, உய்யலாம்-பிழைக்கலாம், நேஞ்சே, மநமே, மையல்-(அப்படிச் செய்யாமல்) மயக்கம், கொண்டு-அடைந்து, அஞ்சல்-பயப்படாதே எ-று

ஏ-அசை 40

## 52. தந்தைதாய் முதலாம்.

திரு நாவுக் கரசு சுவாமிகள் தேவாரம். (திருச் சேறை) 9.

பழகி னல்வரும் பண்டுள சுற்றமும்,
விழவி டாவிடின் வேண்டிய தெய்தொணு,
திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய,
வழக ஞருள ரஞ்சுவ தென்னுக்கே. 41

(இ-ள்) பழகினல்-(ஜன்மாந்தர) வாசனையினல், வரும்-வரப்பட்ட, பண்டு உள-முன்னுள்ள, சுற்றமும்-சுற்றத்தவர்களை, விழ-அத்தியந்தம், விடாவிடின்-விட்டு நீங்காவிட்டால், வேண்டியது-(தான்) விரும்பிய மோக்ஷத்தை, எய்த ஒணு-அடைய முடியாது, திகழ் கொள்-விளங்கும்படியாக. சேறையில்-திருச் சேறை (என்னும் தலத்தில), செம் நெறி-நல்ல மார்க்கத்திலே, மேவிய-பொருந்திய, அழகனுர்-அழகேசப் பெருமான், உளர்-இருக்கும் போது, என்னுக்கு-எதற்காக, அஞ்சுவது-பயப்பட வேண்டும். எ-று. ஏ-அசை.

'சுற்றமும்' என்பதில், 'உம்மை' எச்ச வும்மை 41

## 56. பிறிதுநோய் தன்னேய்.

ஞாநாசாரம்.

மருளுறு மெவையு நூறி மயக்கறத்
தெரிந்து ளோர்க்கு,
மருளறத் துறக்க லாகா வயலொரு பொருளு மில்லாத்,



தெருளினை யறித லானுஞ் சிவமெவ ருளமு மன்னு,
மருளினை யறித லானு மவர்செய லருள றந்தான். 42

(இ-ள்) மருள் உறும்-மயக்கம் பொருந்திய, எவையும்-யாவற்றையும், நூறி-கெடுத்து, மயக்கு அற-(யாதொரு) மயக்கமு மில்லாமல், தெளிந்துளோர்க்கும்-தெளிவை அடைந்தவர்கட்கும், அருள் அற-ஜீவகாருண்ய மில்லாமல், துறக்கல் ஆகா-துறந்திருத்தல் கூடாது, அயல் ஒரு-(எதனுலெனின் தனக்கு) அந்நிய மாக ஒரு, பொருளும்-வஸ்துவும், இல்லா-இல்லை (என்னும்), தெருளுறும்-(சர்வார்த்தரூப) ஞாநத்தினை. முறைமையானும்-(உணர்ந்த) கிரமத்திஞலும், எவர் உளமும்-எல்லா ருடைய இருதயத்திலும், சிவம்-பரமசிவன், மன்னும்-நிலை பெற்றிருக்கின்ருன். அருளினை-(என்னும் பரமசிவனது) காருண்யத்தினை, அறிதலானும்-உணர்ந்திருத்தலிஞலும், அவர்-அந்த சர்வாத்மக திருஷ்டி உடையவரது. தொழில்-(கடமையாகிய) கிரியை, அருள்-ஜீவகாருண்யமாகிய, அறம்-தர்மமே யாகும். எ-று. தான் அசை

"தெளிந்துளோர்க்கும்" என்பதில், உம்மை, சிறப்பு. 42

## 56. பிறிதுநோய் தன்னேய்.

அருட் பிரகாசம்.

உயிர்நித்த மென்றறிந் தாலுநல் லோர்பல் லுயிர்களுற்ற,
துயருக்கி ரங்கல்பு துமைகொல் லோவருட் டோன்றன்
முந்நாட்,

செயிருற்ற தேவர்கு றைகேட்டி ரங்கித்தி ருவுளத்தூ,
டயர்வுற்று குத்தகண் ணீரக்க மாமணி யாய்த்தெனிலே.
43

(இ-ள்) அருள் தோன்றல்-கிருபையே (சொருப மாக வுடைய) பரம சிவன், முந் நாள்-முற் காலத்து, செயிர் உற்ற-துன்பத்தை யடைந்த, தேவர்-தேவர் களது, குறை கேட்டு-குறையீட்டைக் கேட்டு, இரங்கி-இரக்க முற்று, திரு உளத்தூடு-மநத்தின்கண், அயர் வுற்று-சோர்வை யடைந்து, உகுத்த-சிந்திய, கண் நீர்-கண்ணின் ஜல மானது, மா அக்க மணி-பெரிய உருத்திராக்க மணி யாக, ஆய்த்து எனில்-உண்டான தாயின், நல்லோர்-மகான்கள், உயிர்-ஆந்மா, நித்தம்-அழிவற்றது, என்று-என, அறிந்தாலும்-உணர்ந் திருந் தாலும், பல் உயிர்கள்-பல ஜீவர்கள், உற்ற-பொருந் திய, துயருக்கு-துக்கத்திற்கு, இரங்கல்-பச்சாத்தாபப் படுவது, புதுமை கொல்லோ-ஆச்சரிய மாகுமா? (ஆகா தென்ப தாம்.) எ-று.

'அறிந்தாலும்' உம்மை இரக்க எச்சம், ஏ அசை 43

## 57. தனக்கினி யவனும் வகை.

தேவிகாலோத்தரம்.

தனக்கினிய னும்வகையே சராசரங்க ளனைத்தினையு,
நினைத்திகழ்வார் புகழ்வார்பா லொத்திருக்கு நீர்மையினை,
மநத்துடைய னவவ னுமுரைத்த வாசார,
மனைத்துடைய னுகவறி வெறிகமழு மைம்பாலாய். 44



(இ-ள்) வெறி கமழும்-வாசனை பரிமளியாநின்ற, ஐ பாலாய்-ஐந்து வித மாகப் பின்னி யுள்ள கூந்தலை யுடையவளே, தனக்கு-தனக்கு, இனியன் ஆம்-விரும்பத் தக்கவ னுக இருக்கும், வகையே-தன்மையே, சர அசரங்கள்-தாவர ஜங்கம ரூப மா யுள்ள, அனைத்தினையும்-எல்லாவற்றையும், நினைத்து-நினைந்து, இகழ்வார்-(தன்னை) நிந்திப்பவ ரிடத்தும், புகழ்வார்பால்-துதிப்பவர்க ளிடத்தும், ஒத்து இருக்கும்-சம பாவனையோடு கூடி இருக்கும், நீர்மையினை-தன்மையினை, மநத்து-மநத்தின்கண், உடையன் ஆன அவன்-உள்ளவ னுனவன், நாம் உரைத்த-நம்மால் சொல்லப்பட்ட, ஆசாரம்-(ஞாந) ஆசாரங்கள், அனைத்தும்-எல்லாவற்றையும், உடையன் ஆக-அநுஷ்டிப்பவனுக, அறி-உணர்ந்து கொள்வாயாக. எ-று. 44

## 57. தனக்கினி யவனும் வகை.

தேவிகாலோத்தரம்.

நடுங்காம லெவ்வுயிரு நறுக்காது துரும்பனைத்தும்,
பிடுங்காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது,
விடுங்காலா லூழ்த்துதிர்ந்த விரைமலர்க ளவையேந்தி,
யடுங்காலன் றனையட்ட வம்புயங்க ளருச்சிப்பான். 45

(இ-ள்) எவ் உயிரும்-எப்படிப்பட்ட ஜீவர்களும், நடுங்காமல்-(தன்னைக் கண்டு) பயப்படாமலும்,

அனைத்து துரும்பும்-(யா)தொரு விதமான துரும்பையும், நறுக்காது-(கிள்ளாமலும்) வெட்டாமலும், எவையும் முதல்-எவ்விதமான செடிகளையும், பிடுங்காது-பிடுங்காமலும், பிரசம் மலர்-தேன் பொருந்திய புஷ்பங்களை, கொய்யாது-பறிக்காமலும், விடும் காலால்-வீசாநின்ற வாயுவினால், ஊழ்த்து-தள்ளி, உதிர்ந்த-(கீழே) உதிர்ந்திருக்கப்பட்ட, விரை மலர்கள் அவை-வாசனை பரிமளிக்கும் புஷ்பங்களை, ஏந்தி-(கையில்) ஏந்தி (க்கொண்டு), அடும்-கொல்லுகின்ற, காலன் தனை-யமனை, அட்ட-(மார்க்கண்டேயருக்காக) உதைத்துத் தள்ளிய, அம்புயங்கள்-தாமரை மலர் (போன்ற திருவடிகளை), அருச்சிப்பாம்-அருச்சனை செய்வாம். எ-று.

'காலன்தனை'-என்பதில், 'தன்' அசை. 45

### 61. கான்றசோ றதனிற்.

பெருந் திரட்டு (ஞாந சித்தி).

தன்னெஞ்சந் தனக்குச் சான்றது வாகத்
தத்துவ நன்குண ராதே,
வன்னெஞ்ச னாகிக் கூடமே புரிவோன்
வஞ்சகக் கூற்றினுங் கொடியோன்,
பன்னுங்கா லவன்றன் தெரிசநம் பரிசம்
பழுதுற நிரயவே துவுமாம்,
புன்னெஞ்சா லவனும் போய்நர கெய்திப்
பூமியுள் ளளவுமே றானல். 46

(இ-ள்) தன் நெஞ்சம்-தனது மநமானது, தனக்கு-தனக்கு, சான்றது ஆக-சாக்ஷியாக (இருக்க), தத்து



வம்-(ஆந்ம) தத்துவத்தை, நன்கு-நன்றாக, உணராது-(விசாரித்து) அறியாமல், வன் நெஞ்சன் ஆகி-கடினமான மநமுடையவனாய், கூடமே--இரகசியமாக (கூடா ஒழுக்கத்தை), புரிவோன்-செய்யுமவன், வஞ்சக-வஞ்சகத் தன்மையோடு கூடிய, கூற்றினும்-இயமனைக் காட்டிலும், கொடியோன்-கொடியவனாவன். பன்னுங்கால், சொல்லுமிடத்து, அவன்--அவனை, தெரிசநம்-பார்ப்பதும், பரிசம்-தொடுவதும், பழுது உற-குற்றம் பொருந்திய, நிரய-ஏதுவும் ஆம்-நரகத்திற்குக் காரணமும் ஆகும், புன் நெஞ்சால்-அல்ப மநதினால், அவனும் போய்--அப்படிப்பட்டவனும் போய், நரகு எய்தி-நரகத்தை அடைந்து, பூமி உள்ள அளவும்-பூமி உள்ள பரியந்தம், ஏறான்-நன்மையை யடையான். எ-று. 'சான்றது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, 'கூற்றினும்', ஏதுவும்', 'அவனும், என்ற உம்மைகள்-இழிவு சிறப்பு. ஆல், தன், அசை. 46

### 63. யாதியா தொருவ.

அறிவாநந்த சித்தியார். மோக்ஷ ஏது 35

அளிமலர் விட்டுவிட் டாய்ந்து மதுவுண் டகநிரப்பிக்,
களிவந்தி ருந்தக ருத்திங்கு றநின்க வலையென்னும்,
விளிவினை விட்டுவிட் டாய்துவி யன்குரு மேவிநின்று,
தெளிவந்து ஊனக்கண்டி டுமள வுங்குருத் தேடிடுமே. 47

(இ-ள்) அளி--வண்டானது, மலர் விட்டு விட்டு-ஒவ்வொரு புஷ்ப மாகப் பார்த்து (தேனில்லாததை)

விட்டு, ஆய்ந்து-(தே னுள்ள புஷ்பத்திலிருந்து) விசாரித்து, மது உண்டு-தேனைக் குடித்து, அகம் நிரப்பி-வயிறு நிரம்பிய (பின்னர்), களி வந்து--சந்தோஷித்து, இருந்த--இருக்கப்பட்ட, கருத்து-தன்மையினை, இங்கு உற-இவ்விடத்துப் பொருந்தி யிருப்பது போல, நின் கவலை-உனது கவலை, என்னும்-ஆகிற, விளிவினை--துக்கத்தினை, விட்டு விட்டு-ஒழித்து நிவர்த்தியாக, ஆய்ந்து--விசாரித்து, வியன்-சிரேஷ்டம் மிக்க, குரு-ஆசிரியரை, மேவி நின்று-பொருந்தி யிருந்து, தெளி (வு) வந்து-தெளிவினை யடைந்து, உனை-உனது சொருபத்தை, கண்டிடும் அளவும்-உணரும் பரியந்தம், குரு-குருவை, தேடிடும்-(முமுக்ஷு) தேடிக் கொண்டிருப்பான். எ-று ஏ-அசை 'அளவும்' என்ற உம்மை, எல்லைப்பொருட்டு. 47

## 64. சமரமுற் றிடாது.

### அநுபவ சித்தி.

மறைக ளாகம முதற்கலை முழுதையு மயலற மிகவோதிக்,
குறைவி லாவகைப் பொருடனை மதுரமாக் கூறவல்
லவரேனு,
நிறைவ தாகிய பொருளினுக் குத்தகு நிலையவ ரலராகி,
லறைவ தாகிய வவர்மொழி யாத்தவாக் கியமென
வறையேமே. 48

(இ-ள்) மறைகள்-(நான்கு) வேதங்கள், ஆகமம்-(இருபத்தெட்டு) ஆகமங்கள், முதல்-முதலிய, கலை முழுதையும்-(அறுபத்தி நான்கு) கலை க்ஞானங்கள் முழுமையும், மயல் அற-மயக்க மின்றி, மிக ஓதி-மிகவும் படித்து, குறைவு இலா வகை-பூரணமாக, பொருள் தனை-(அதன்) அர்த்தங்களை, மதுரம்-ஆ (க)--இனிமையாக, கூற-சொல்ல, வல்லவரேனும்-சாமர்த்தியமுடையவ ராயினும், நிறைவது ஆகிய-பூரணமா யுள்ள, பொருளினுக்கு-(அவ்) வர்த்தத்திற்கு, தகும்-தகுதியான, நிலையவர்-தன்மையை உடையவ ராக, இலர் ஆகில்-ஒழுகா திருப்பா ராயின், அறைவது ஆகிய-சொல்லப்படுவ தாகிய, அவர் மொழி-அவரது வாக்கியத்தை, ஆத்த வாக்கியம்-உண்மையான வாக்கியம், என-என்று, அறையேம்-சொல்லமாட்டோம். எ-று. 'வல்லவரேனும்' உம்மை சிறப்பு. தனை-தன்-ஐ-அசை. 48

## 64. சமரமுற் றிடாது.

### அநுபவ சித்தி.

இறைக ணன்பினை யுரைசெய்து தாமிறைக் கன்பகத்
திலரேனுந்,
துறவு நன்றென வுரைசெய்து துறவினி னிலமைய
திலரேனுந்,
கறைக ளொன்றுள செயல்களின் மூளுறுங் கருத்தறி
கிலரேனு,
மறையி னன்குறு மவர்மொழி யாத்தவாக் கியமென
வறையாதே. 49

(இ-ள்) இறைகண்-பரமசிவனிடத்து, அன்பினை-

பக்தியினை, உரை செய்து-(பண்ணும்படி) சொல்லி, தாம்-தாங்கள், இறைக்கு-பரமசிவனுக்கு, அன்பு-பக்தி, அகத்து-மநதின்கண், இலரேனும்-இல்லாதிருப்பாராயினும், துறவு-துறவினை (யடைதல்), நன்று என-நலமாம் என்று, உரை செய்து-உபதேசித்து, துறவினின்-துறவறத்தினது, நிலைமையது-தன்மை, இலரேனும்-அநுஷ்டியாதவரா யிருப்பினும், கறைகள்-குற்றங்களை, ஒன்றுள--பொருந்தி யுள்ள, செயல்களின்-காரியங்களில், மூளுறும்-பிரவிர்த்திக்கின்ற, கருத்து-எண்ணத்தை, அறிகிலரேனும்-அறியாதவர்களா யிருப்பினும், அறையின்-சொல்லுமிடத்து, நன்கு உறும்-நன்றாகப் பொருந்திய, அவர் மொழி-அவர் வாக்கியத்தை, ஆத்த வாக்கியம்-உண்மை வாக்கியம், என அறையாது-என்று சொல்லமாட்டோம். எ-று.
ஏ-அசை. 49

## 64. சமரமுற் றிடாது.

### அநுபவ சித்தி.

தெய்வ வாணிநற் செந்தமி ழியலிசை தெரிந்துபா
டைகளும்பொய்,
மெய்ய தாகவே பொருள்களும் விளங்கிட விளம்பவல்
லவரேனு,
மையி லாவகை மொழிவதொன் றவர்செயன்
மருவலொன் றெனிலத்தை,
யைய மூவரின் முதல்வரே மொழியினு மாத்தவாக்
கியமென்னார். 50



(இ-ள்) ஐய!-ஐயனே, தெய்வ வாணி-சம்ஸ்க்ருதமும், நல் செந்தமிழ்-நல்ல செவ்விய தமிழிலும், (பஞ்ச வக்ஷண மாகிய) இயல்--இயலும், இசை-சப்த சுரங்களும் (நாடகங்களும்), பாடைகளும்-(இன்னும் அநேக விதமான) பாஷைகளும், தெரிந்து-உணர்ந்து, பொய்-பொய்யை, மெய்யது ஆக-உண்மையாக, பொருள்களும்-அர்த்தங்களும், விளங்கிட-விளங்கும்படியாக, விளம்ப--சொல்ல, வல்லவரேனும்-சாமர்த்திய முடையவரா யிருப்பினும், அவர்--அவர்கள், மையிலா வகை-மயக்க மில்லாமல், மொழிவது-சொல்லுவது, ஒன்று-ஒன்று, செயல் மருவல்--செய்கை அநுட்டிப்பது, ஒன்று-ஒன்று, எனில்-என்றால், அத்தை-அதனை, மூவரின்-மும் மூர்த்திகட்கும், முதல்வரே-தலைவரே, மொழியினும்-சொன்னாலும், ஆத்த வாக்கியம்-உண்மை வாக்கியம், என்னார் என்று கருதார்கள். எ--று.
ஏ-அசை 'வல்லவரேனும்' உம்மை சிறப்பு 50

## 67. ஈங்கறை முறையிற்.

தத்துவ ராயர், நான் மணி மாலை. 9.

—ஒளித்தரு,

மறிவும ரக்கல னமைத்துத் துறவி,
ஞமக் கூம்பு நாட்டி யேம,
வருளாங் கயிற்றிற் பிறழ்வறக் கட்டிப்,
பத்தி யென்னும் பாய்பூ ரித்து,
முத்தி யூரிற் றம்மை யுய்த்தருள்,
சொருப னென்னு மொருமீ காம,

னருந்தவர்க கரசின் பாதந்,

திருந்தவைக் கிலர்தஞ் சென்னியின் மிசையே. 51

(இ-ள்) ஒளி தகும்-பிரகாசத்தை உடைய தகுதி யான, அறிவு-விவேக மாகிய, மரக் கலன்-கப்பலை, அமைத்து-செய்து, துறவு இன்-துற வென்று சொல்லப் பட்ட, நாம கூம்பு-பெய ராகிய பாய் மரத்தை, நாட்டி-(ஸ்தாபித்து) நிறுத்தி, ஏம அருளாம்-(இயம நியமம் ஜீவகாருண்யம் முதலிய) சந்தோஷிக்கும் ஞான மாகிய, கயிறிநீல்-கயிற்றினுலே, பிறழ்வு அற-(இராகத்து வேஷ காற்றினுலே) பிறழ்ந்து போகாமல், கட்டி-பிணைத்து, பத்தி என்னும்-பத்தி யாகிற, பாய்-பாயை, பூரித்து-விரித்து, முத்தி ஊரில்-மோக்ஷமாகிற ஊரில், தம்மை-தங்களை, உய்த்து-பிழைக்கும்படி, அருள்-அநுக்கிரகஞ் செய்கின்ற, சொருபன் என்னும்-சொருபாநந்த சுவாமி கள் என்னும், ஒரு-ஒப் பற்ற, மீகாமன்-மாலுமியும், அரும் தவர்க்கு-அருமை யான தவத்தவர்கட்கு, அரசின்-அரச ராகியு முள்ளவரது, பாதம்-திருவடியை, தம்-தம் முடைய, செந்நியின் மிசை-சிரசின் மீது, திருந்த-செவ்வை யாக, வைக்கிலர்-சூட்டிக் கொள்கின்றுர்க ளில்லை. எ-று. ஏ-அசை. இன்-சாரியை. 51

## 73. பாரினட் டாங்கா திக.

திருக் குறள். 2-7-1.

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க,

விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 52



(இ-ள்) இகல்-மாறுபா டுடைய, வேந்தர்-அரசர்க ளிடத்து, சேர்ந்து-பொருந்தி, ஒழுகுவார்-இருக்கும் அமைச்சர்கள், அகலாது-(அரசனை விட்டு) தூரச் செல் லாமலும், அணுகாது-கிட்ட நெருங்காமலும், தீ காய் வார்-நெருப்பினிடத்திலே (குளிர்) காய்பவர், போல்க-போல இருக்க. எ-று.

குரு, பிரீதியாக விருக்கின்ருரென்று நெருங்கியும், கோப மாக விருக்கின்ருரென்று தூரத்திலும், இல் லாமல், மத்திம மாக விருந்து குருவினது அநுக்ரகத் தைப் பெற வேண்டு மென்ப தாம். 52

## 73. பாரினட் டாங்கா திக.

சிவ தருமோத்தரம். 2-25.

வலஞ்செய்து தண்டதனை மானவிதி முறைதழுவத்,

தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற் றிருகன்னந்,

துலங்குமுக வாய்புயங்க ளெனுமெட்டுந் தோயமயி,

ரிலங்குசிரங் கரமுழந்தா ளெனுமைந்து மிலங்குறவே. 53

(இ-ள்) விதி முறை-விதி பூர்வக மாக, வலம் செய்து-(வலப்) பிரதக்ஷணம் வந்து, தண்டதனை மான-தண்டத்தைப் போல, தலை-சிரசும், கரம்-(இரு)கையும், இரு கன்னம்--இரண்டு தவடைகளும், துலங்கும்-விளங்காநின்ற, முக வாய்-முகவாயும், புயங்கள்-இரு புஜங்களும், எட்டும்--(ஆக) எட்டு அங்கங்களும்,

தலம் தன்னில்-பூமியில், தோய-புரளும் படியாக, பணிந்து-நமஸ்கரித்து, தழுவ-நிற்பாயாக, மயிர் இலங்கு-ரோமம் விளங்காநின்ற, சிரம்-தலையும், கரம்-(இரு) கையும், முழம் தாள்-(இரு) முழங் கால்களும், எனும்-என்று சொல்லப்பட்ட, ஐந்தும்-ஐந்து (அங்கமு)ம், இசைந்திட-பூமியிற் படும்படியாக, பணிந்து-நமஸ்கரித்து, எழுக-எழுந்து நிற்பாயாக, எ-று. ஏ-அசை. 53

## 74. சற்குரு வருளா.

பெருந் திரட்டு.

ஒப்பி லமல ேனதிவைத்த வுரையை யோத லோதுவித்தல்,
செப்பும் பொருளைத் திரிவுமறத் தெளிகை பிறரைத்
தெளிவிக்கை,
தப்பா ததனை மநத்தகத்தே தரிக்கை யெனவுந்
தானைந்தாம்,
வைப்பா யருந்தா மருந்தாகிச் சிறந்த ஞாநம கவினையே.
54

**(இ-ள்)** ஒப்பு இல்-(ஒரு வாற்றானும்) உவமை கூற முடியாத, அமலன்-பரம சிவன், ஓதிவைத்த-கூறி யுள்ள, உரையை-வேதார்த்தங்களை, ஓதல்-படித்தலும், ஓதுவித்தல்-பிறரைப் படிக்கும்படி சொல்லுதலும், செப்பும்-(மேலே) சொல்லப்பட்ட, பொருளை-அர்த்தங்களை, திரிவும் அற-சந்தேக மில்லாது, தெளிகை-அறிதலும், பிறரை-அந்நியர்கட்கு, தெளிவிக்கை-சந்தேகம் வராதபடி சொல்லிக் கொடுத்தலும்,



அதனை தப்பாது-அந்த வாக்கியங்களை பிழைபடாது, மநத்து அகத்து-மநதி னுள்ளே, தரிக்கை-வைத்துக் கொள்ளுதலும், எனவும்-என்றும், ஐந்தாம்-ஐந்து விதமாகச் சொல்லப்படும், சிறந்த-மேன்மை யுடைய, ஞாந மகவினை-ஞாந மாகிற குழந்தையை, அருந்தா-சாப்பிட முடியாத, மருந்து ஆகி-ஔஷதமாய், வைப்பாய்-வைத்துக் கொள்வாயாக எ-று ஏ-தான்-அசை. 'எனவும்' என்ற உம்மை முற் றும்மை 54

## 76. பகர்நரு தொழில்க

ஞாந வாசிட்டம், முமூக்ஷுப் பிரகரணம் 2-0-4.

மிகமுயன்று வருந்தாமற் சமமா கின்ற
வேண்டுகொளாற் றன்முயல்வால் விநோதந் தன்னாற்,
பகர்மநமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்,
பலபிறப்பிற் பரிசயங்க ளகலப் பண்ணி,
யகல்சுபவா தனையுதித்தான் முயற்சி பேரு
மையுறினுஞ் சுபமுயல்வை யதுதீ தல்ல,
திகழ்மநம்போய்த் தற்பதத்தைத் தெளியு மட்டுந்
தேசிகனால் சொல்வழியிற் செல்லு வாயே. 55

**(இ-ள்)** மிக முயன்று-அதிகமான (பிராணாயாமம் முதலியவற்றால் நிரோதம் செய்யக் கருதி) முறற்சி செய்து, வருந்தாமல்-(அதனால்) வருத்த மடையாமல், சமம் ஆகின்ற-சமாதாந மாகிற, வேண்டுகொளால்-விண்ணப்பங்களினாலும், தன் முயல்வால்-புருஷப் பிரயத்நத்தாலும், விநோதம் தன்னால்-விநோதக் கதைகளினாலும், பகர் மநம் ஆம்-சொல்லாநின்ற மந மாகிய

சிறு மகவை-சிறிய குழந்தையை, நிறுத்தல்-வேண்டும். நிரோதஞ் செய்ய வேண்டும். பல பிறப்பின்-அநேக ஜநநங்களின் ஏதுவாக வந்துள்ள. பரிசயங்கள்-வாசனைகளை, அகலப் பண்ணி-நீங்கும்படி செய்து, அகல்-(தன்னிடத் திருந்து) நீங்கியுள்ள, சுப வாதனை-சுத்த வாசனை, உதித்தால்-உண்டாகுமாயின். முயற்சி பேறும்-(புருடன் செய்த) பிரயத்தநத்திற்கு பிரயோஜநமாம், ஐ உறினும்-சம்சய மடையினும், சுபம் முயல்வை-நன்மையிலேயே முயற்ச்சிப்பாய், அது தீது அல்ல-அதுகுற்றமு மாகாது, திகழ் விளங்காநின்ற, மநம் போய்-(தூல) மந மானதுபோய், தத் பதத்தை-(அந்த) தத் பத (இலக்ஷியார்த்தப் பிரம) த்தை, தெளியுமட்டும்-பொருந்தும் பரிபந்தம், தேசிகன்-ஆசிரிய ருபதேசித்த பிரகாரமும், நூல் சொல் வழியில்-சாஸ்திரத்திற் கூறும் மார்க்கத்திலும், செல்லுவாய்-அநுட்டிப்பாயாக. எ-று.
ஏ-அசை. 55

## 76. பகர்நரு தொழில்க.

### திரு மந்திரம்.

உடலாங் குகையி லுணர்வாகும் பீடத்.
தடலார் சமாதி யிதயத்த தாக,
நடமா டியகுகை நாடிய யோகி,
மிடையாகா வண்ணமே சாதிக்கு மெல்லவே 56

(இ-ள்) உடல் ஆம்-சரீர மாகிற, குகையில்-குகையினிடத்து, உணர்வு ஆகும்-ஞாந மாகிய, பீடத்து-



பீடத்தின் மீது, அடல் ஆர்-வலிமை பொருந்திய, சமாதி-சமாதி, இதயத்தது ஆக-இருதயத்தி னிடமாக, நடம் ஆடிய-சஞ்சாரம் செய்யப்பட்ட, குகை நாடிய-குகையைப் பொருந்திய, யோகி-யோகியானவன், மிடையாகா வண்ணம்-துக்கம் மடையாதபடி, மெல்ல-(பையப்) பைய. சாதிக்கும்-(மநதை லயம் செய்ய) முயற்சி செய்வன். எ-று. ஏ-ஏ-அசை. 'இதயத்தது' அது, பகுதிப் பொருள் விகுதி. 56

## 77. உச்சியம் போதின்

### திரு மந்திரம். 1888

பரந்துல கேழும் படைத்தபி ரானை,
யிரந்துணி யென்பர்க ளெற்றுக்கி ரக்கு,
நிரந்தர மாகநி னையும டியா,
ரிரந்துண்டு தன்னடி யெட்டச்செய் தானே. 57

(இ-ள்) பரந்த-விரிந்துள்ள, உலகு ஏழும்-ஏழுலகங்களையும், படைத்த பிரானை-உண்டுபண்ணிய பரமசிவனை, இரந்து உணி-பிச்சை யேற்று உண்பவன், என்பர்கள்-என்று கூறுவார்கள், எற்றுக்கு-எதற்காக. இரக்கும்-பிச்சை யெடுக்கின்றான், நிரந்தரம் ஆக-இடைவிடாமல், நினையும்-(தன்னை) ஸ்மரிக்கும், அடியார்-சாதுக்கள், இரந்து உண்டு-பிச்சை யெடுத்துப் புசித்து. தன் அடி-தனது திரு வடியை, எட்ட-அடையும்படியாக, செய்தான்-(செய்வதன் பெருட்டுப் பரமேசுவரன் பிச்சை யேற்றுக்) காட்டினான். எ-று. ஏ-அசை. 57

### 77. உச்சியம் போதின்.

திருமந்திரம். 1626.

பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்,
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்,
மறப்பில ராகிய மாதவஞ் செய்வர்,
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. 58

(இ-ள்) பிச்சை செய்-பிச்சை யொடுக்கப்பட்ட, மாந்தர்-மநிதர்கள், பல பிறப்பு--அநேக வித ஜந்மத்தை, அறியார்-அடையார்கள், சிறப்பொடு-மேன்மையுடனே, வேண்டிய--(தாங்கள்) விரும்பிய, செல்வம்--(நித்திய மான) ஐசுவரியத்தை, பெறுவர்-அடைவார்கள், மறப்பு--அஞ்ஞாநம், இலர் ஆகிய--இல்லாதவர்களாய், மா தவம்--சிரேஷ்டம் பொருந்திய தவத்தை, செய்வர்-செய்பவர்கள், பிறப்பினை-ஜநந (மரண) த்தினை, நீக்கும்-நிவிர்த்தித்துக் கொள்ளும், பெருமை-மேன்மையை, பெற்றார்-அடைந்தவர்களாவார்கள். எ-று. ஏ--அசை. 58

### 77. உச்சியம் போதின்.

திருமந்திரம். 1885.

அச்சினு ணின்ற பொருடன்னை யுள்ளுவோ,
ருச்சியம் போதாக வுள்ளமாக் கோயிற்குப்,
பிச்சைபி டித்துண்டு பேதம றநினைந்,
திச்சைவிட் டேகாந்த மேறியி ருப்பரே. 59



(இ-ள்) அச்சின்-இருதயத்தின், உள் நின்ற-உள்ளே யிருக்கப்பட்ட, பொருள் தன்னை-(ஆந்ம) வஸ்துவை, உள்ளுவோர்--சிந்திப்பவர்கள், உச்சியம் போது ஆக-உச்சிக் காலத்திலே, உள்ளம் ஆ-உள்ள மாகிற, கோயிற்கு-கோயிலுக்கு (பசி நீங்குதற் பொருட்டு), பிச்சை-பிச்சையை, பிடித்து-(வீடு வீடாக) வாங்கி, உண்டு-சாப்பிட்டு, பேதம் அற-(ஜாதி பேதம்-சீவ ஈசுவர பேதம் முதலிய) பேதம் இல்லாமல், நினைந்து-(சர்வாந்மக திருஷ்டியாக) சிந்தித்து, இச்சை விட்டு-நிராசை யுடையவராய், ஏகாந்தம்-ஏகாந்த ஸ்தாநத்தை, ஏறி யிருப்பர்-பொருந்தி யிருப்பார்கள். எ-று. ஏ--அசை. 'பொருள் தன்னை' என்பதில், தன்-அசை. 59

### 79. மிதித்திடு முனமிற்.

கூர்ம புராணம்.

இவ்வகை யைய மேற்றுநன் குண்போன்
காடிசோ றெவற்றினை யேனுஞ்,
செவ்விதி னளித்த தருந்திடல் வேண்டு
மனைதொறுஞ் சென்றுசென் றுற்று,
வெவ்வழல் போல வெகுண்டுமற் றென்றை
விழைந்துநீ யளித்தியென் றருந்த,
லவ்விய மவித்த மநத்தினேர்க் காகா
வென்றுநான் மறையறைந் திடுமால். 60

(இ-ள்) இவ் வகை-இந்தப் பிரகாரம், ஐயம்-

பிச்சையை, ஏற்று-வாங்கி, நன்கு-நன்ருக, உண்போன்-புசிப்பவன். காடி-காடியாயினும், சோறு-சாத மாயினும், எவற்றினேயேனும்-(வேறு) ஏதாயினும், அளித்தது-கொடுத்ததை, செவ்விதின்-செவ்வையாக, அருந்திடல் வேண்டும்-(வாங்கிப்) புசிக்க வேண்டும். மனை தொறும்-(அப்படிக் கல்லாமல்) வீடுக டோறும், சென்று சென்று-போய் போய், உற்று-இருந்து, வெவ் அழல் போல-கொடிய அக்நி போல, வெகுண்டு-கோபத்தை யடைந்து, ஒன்றை-அவர்கள் கொடுத்ததை விட்டு, கொடாததை. விழைந்து-விரும்பி, நீ அளித்தி-நீ கொடுப்பாயாக, என்று அருந்தல்--என (கேட்டு வாங்கிப்) புசித்தல், அவ்வியம் அவித்த-பொய்யை நீத்த, மநத்தினேர்க்கு-மந முடையவர்கட்கு, ஆகா என்று-கூடாது என்று, நான் மறை-நான்கு வேதங்களும், அறைந்திடும்-கூறுகின்றன. என்றவாறு மற்று-ஆல்-அசை. 60

## 82. தன்னரு குறுசேய்.

அஞ்ஞ வதைப் பரணி-காமாதி படைச் செருக்கு. 22.

கோப மிக்கபோ தேவ ராறுவார்,
குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகுஞ்,
சாப மிட்டுமா தவர்க ளாயினர்,
தலைமை மிக்கதந் தவமி ழப்பரே. 61

(இ-ள்) கோபம் மிக்க போது-கோப மதிகரித்த போது, ஆறுவார்-(அதனைத்) தணித்துக் கொள்பவர், ஏவர்-யா ரிருக்கின்ருர்கள், குறுகுவோர் தமை-(தம்மை) நெருங்கியவர்களை, கொடிய--கொடிதான, நோய் புகும்-வருத்தம் அடையும் படியாக, சாபம் இட்டு-சாபத்தைப் போட்டு, மா தவர்கள் ஆயினர்-மஹா தவ சிரேஷ்டர்கள், தலைமை மிக்க-சிரேஷ்ட மிகுந்த, தம்-தம்முடைய, தவம்--தவத்தை, இழப்பர்-இழந்துவிடுகின்ருர்கள். எ-று. ஏ-அசை. 'குறுகுவோர் தமை' என்பதில்-தம்-அசை. 61



## 84. நடந்துறங் கொருவன்.

திரு மந்திரம்.

நிற்றலி ருத்தல்கி டத்தன டையோடல்,
பெற்றவக் காலுந்தி ருவருள்பே ராமற்,
சற்றியன் ஞாநந்தந் தாநந்தந் தங்கவே,
யுற்றபி றப்பற்றெ ளிர்ஞாந நிட்டையே. 62

(இ-ள்) நிற்றல்-நிற்கும் பொழுதும், இருத்தல்-(உட்காாந்) திருக்கும் பொழுதும், கிடத்தல்-படுத்திருக்கும் பொழுதும், நடை-நடந்துகொண்டிருக்கும் பொழுதும், ஓடல்-ஓடிக்கொண்டிருக்கும் பொழுதும், பெற்ற-(இவ் வாறு கரண தருமங்களை) பொருந்திய, அக்காலும்-அக் காலங்களிலும், திரு அருள்-(தனது) சுவாநுபூதியி னின்றும், பேருமல்-பிறழாமல், இயல் சற்று (சத்து)- ஸ்வாபமாகப் பொருந்தியுள்ள, சத்து,

ஞானம்-சித்து, ஆநந்தம்-ஆநந்தத்தினை, தந்து-கொடுத்து, தங்க-நிலைத் திருக்கும்படியாகச் செய்தல். உற்ற-(கருமாதிநமாகப்) பொருந்திய, பிறப்பு-ஜன்மத்தினை, அற்று-நிவிர்த்திக்கின்ற, ஒளிர்-பிரகாசம் பொருந்திய, ஞாந-ஞாநத்தின்து, நிட்டை-நிஷ்டையாம். எ-று. ஏ-ஏ-அசை சத்து இயல் 'சற்று இயல்' என, எதுகை நோக்கி தகரம், றகரமாகத் திரிந்தது. 62

## 85. நித்திரை நடைமீ றிடிற்

மெய்ஞ் ஞாந விளக்கம்

உறங்கிடிற் பிணமே யென்ன வுணர்வுமாய் தலினுற் றுன்பம்,
பிறங்குமக் கநவாற் றேன்றும் பீருவான் மிகவுந் துன்ப,
மறங்கண்மற் றேர்ச்சி முன்னு மனைத்துமாய்ந் திருளே மூடு,
முறங்கலிற் கொடிய துன்ப மோர்ந்திடி னில்லை யன்றே. 63

(இ-ள்) உறங்கிடில்-சுழுத்தி யவஸ்தையில், பிணமே என்ன-சவத்தைப் போல், உணர்வு-ஞாநம், மாய் தலினுல்-(இல்லாமல்) நசித்தலினுலே, துன்பம்-துக்கம், பிறங்கும்-விளங்கும். அக் கனவால்-அந்த சொப்பனாவஸ்தையில், தோன்றும்-உண்டாகின்ற, பீருவால்-பீதியினுல், மிகவும் துன்பம்-மிகவும் துக்கமாம், அறங்கள்-(சுழுத்தியில்) புண்ணியங்கள், ஓர்ச்சி-அறிதல், முன் ஆம்-முதலனவாகிய, அனைத்தும்-யாவற்றையும், மாய்ந்து-கெடுத்து, இருளே மூடும்-அஞ்ஞாநமே மறைத்துவிடும், உறங்கலில்-(அதனுல்) நித்திரையைக் காட்டிலும், கொடிய துன்பம்-கொடிய துக்கமானது, ஓர்ந்திடின்-விசாரிக்குமிடத்து, இல்லை-(வேறு) இல்லையாம். எ-று. மற்று-அன்று-ஏ-அசை. 63



## 87. அறவுநித் திரையைத்.

பகவற்கிதை (பரமார்த்த தரிசநம்) 6 யோக அத்தியாயம். 13

எண்டிகமு மியோகத்தை யிப்பரிசே யெப்பொழுதுங்,
கொண்டுபயில் வார்கடைக்கா லென்னையே கூடுவபிரா,
லுண்டியினின் மிகுவாருண் டுறப்பார்மிக் குறங்கிடுவார்,
கண்டுயிலை யறத்துறப்பா ரவர்க்கிதுகை வாராதால். 64

(இ-ள்) எண்-(அப்பியாச வைராக்கியங்களின்) வலியினுல், திகழும்-விளங்காநிற்கும், யோகத்தை-(சம்பிரக்ஞாத) சமாதியை, இப் பரிசே-(பூர்வம் சொன்ன) நியமப் பிரகாரமாகவே, கொண்டு-(கைக்) கொண்டு, எப் பொழுதும்-நிரந்தரமும், பயில்வார்-அப்பியாசியா நிற்பவர், கடைக்கால்-முடிவில் (சித்த நிரோதமான விடத்து என்றபடி), என்னையே-(பரம நிர்வாண சொரூபமான,) என்னையே, கூடுவர்-அடையாநிற்பர், (சித்த நிரோதமான விடம் சம்பிரக்ஞாத சமாதியின் பயனுன அசம்பிரக்ஞாத சமாதி யென்றறிக), [யோகாப்பியாச முடைய புருஷர்க்கு ஆஹாராதி நியமங் கூறுகின்ருர்] உண்டியினின்-உணவின்கண், மிகுவார்-மிக

விருப்ப முடையவராய் அதனை மிகுந் துண்ணுநிற்ப வரும், ஊண்-உணவினை, துறப்பார்-(அத்தியந்த) முண்ணு தொழிப்பவரும், மிக்கு-மிகுந்து, உறங்கிடுவார்--நித்திரை செய்பவரும், கண் துயிலை-நித்திரையை, அறத் துறப்பார்--அத்தியந்த மொழிப்பவரும் (ஆகிய), அவர்க்கு-அவர்கட்கு, இது-இந்த யோகமானது, கை வாராது-சித்தியாது. எ-று ஆல்-ஆல்-அசை. 64

## 87. அறவுந் திரையைந்.

தத்வராய ஸ்வாமிகள், அடங்கண் முறை, அமிர்த சாரம். 111

செவ்வே யுடலுஞ் சிரமுங்க ழுத்துமுற,
வெவ்வா தநத்திலி ருந்தவர்க்குங்—கைவந்தால்,
வாத முதனோய் நலியா மதியுடையோர,
ராதந மென்பத து. 65

(இ-ள்) உடலும்-சரீரமும். கழுத்தும்-கழுத்தும், சிரமும்-சிரசும், செவ்வே-நேரே (அசையாமல் என்றபடி), உற-பொருந்தும்படியாய், எவ் ஆதநத்தில்-எப்படிப்பட்ட ஆசநத்திலாவது, இருந்தவர்க்கும்-இருந்து அப்பியாசிப்பவர்களுக்கும், கை வந்தால்-(ஆதநமானது) கைகூடுமாயின், வாதம் முதல்-வாதம் முதலிய, நோய்-வியாதியினாலே, நலியா-துன்ப மடைய மாட்டார்கள், மதியுடையோர்-புத்திமான்கள், அது-அதனையே, ஆதநம்-ஆசநம், என்பது-என்று சொல்லுவதாம். எ-று. 'இருந்தவர்க்கும்' என்றதில், உம்மை சிறப்பு. 65



## 88. உறக்கமும் பசியு.

காசி காண்டம்.

கருவிடை யமுந்துந் துன்பமு நிலத்தின் கண்ணுறிற்
கொடியவெந் நோயான்,
மருவுவெந் துயரு நரைதிரை யெய்தி வருந்திடுந்
துன்பமுங் கூற்ரு,
ஓருவினை யொருவுந் துன்பமு மீட்டுங் கருக்குழி
யொன்றுறு துயரும்,
வெருவற வெண்ணி யின்பவீ டதனை மேவநன்
குணர்தலே வேண்டும். 66

(இ-ள்) கருவிடை-(மாதாவினது) கருப்பத்தில், அமுந்தும்-(ஜவித அவஸ்தைகளினால்.) வருத்த மடைகின்ற, துன்பமும்-துக்கத்தையும், நிலத்தின்கண்-இப் பூமியின்கண், உறில்-பிறந்த காலத்து, கொடிய-கொடிதான, வெம் நோயான்-வருத்துகின்ற வியாதியாதிகளினாலே, மருவு-அடைகின்ற, வெம் துயரும்-வெவ்விய துக்கத்தையும், நரை திரை எய்தி-(வயோதிகப் பருவத்தில் மயிர்) நரைத்தலும் (தோல்) சுருங்கலு மடைந்து, வருந்திடும்--வருத்த மடைகின்ற, துன்பமும்-துக்கத்தையும், கூற்ருல்-யமனாலே, உருவினை-(மரண காலத்தில்) சூக்ஷும சரீரத்தை, ஒருவும்-(நீக்கி யாதநா சரீரத்தில்) புகும்படி செய்கின்ற, துன்பமும்-துக்கத்தினையும், மீட்டும்-மறுபடியும், கரு குழி--கருப் (பப்) பள்ளத்தில் (போய்), ஒன்று உறு-பொருந்தும்படி செய்கின்ற, துயரும்-துன்பத்தையும், வெறுவற-

(கருதி) மிகப் பயந்து. எண்ணி-விசாரித்துப் பார்த்து, இன்ப-மோக்ஷாநந்த மாகிற, வீடதனை-வீட்டை, மேவ-அடைதற் பொருட்டு, நன்கு-நன்ருக, உணர்தல்-(விசாரித்து) அறிய, வேண்டும்-வேண்டும். எ-று. ஏ-அசை. 'வீடதனை' என்பதில். அது பகுதிப் பொருள் விகுதி. 66

### 88. உறங்கமும் பரியு.

சிவ தருமோத்தரம். 8-32.

பொற்க டத்தின் மலம்பொருந்திற் புல்லி யரும்பொ
ருணசையா,
லக்க டத்தைப் பற்றியிடா ரங்கை யினுல வனிதனின்,
மக்க டமது டலினைத்தா மலபாண் டமென வறிந்து,
மெக்க ணக்கா லிகழாதே யருவ ருப்பற் றிருக்கின்ருர். 67

(இ-ள்) பொன் கடத்தில்-பொன்னுற் செய்யப் பட்ட குடத்தினுள், மலம் பொருந்தில்-மல் மிருக்கு மாயின், அவனிதனில்-பூமியில், புல்லியரும்-அற்ப அறிவுடையவர்களும், பொருள் நசையால்-பொருளாசையினுலே, அக் கடத்தை-அந்த (மல முள்ள) குடத்தை, அம் கையினுல்-அழகிய கை யால், பற்றியிடார்-தொடமாட்டார்கள், மக்கள்-மநிதர், தமது உடலினை-தம் முடைய சரீரத்தை, மல பாண்டம்-மல (ம் நிறைந்த) பாத்திரம், என அறிந்தும்-என்று உணர்ந்தும், எக் கணக்கால்-எந்தத் தன்மையினுலே, இகழாது-வெறுக்காமல், அருவருப்பு அற்று-அருவருப்



பின்றி, இருக்கின்ருர்-இருக்கின்ருர்களோ (தெரிய வில்லை) எ-று. ஏ-அசை. 'அறிந்தும்' என்ற உம்மை இழிவு சிறப்பு. 67

### 93. மைப்படு விழியா.

ஆநந்த போதம்.

கள்ளக் கோலக்க ருங்குழன் மாதர்பான்,
முள்ளித் தேனைமு னிந்துயர் முத்தியாம்,
வெள்ளத் தேனைவி ரும்பும்வி டாயினு,
னெள்ளிற் போதுமி ராதுட னேகினுன். 68

(இ-ள்) கள்ள-கள்ள (மன முடைய), கோல-அழகிய, கரும் குழல்-கரிய கூந்தலை யுடைய, மாதர் பால்-பெண்களிடத்துள்ள (ஆசையை), முள்ளித் தேனை-முள்ளிப் புஷ்பத்தின் மீது இருக்கப்பட்ட தேனுக்குச் (சமானமாகக் கருதி), முனிந்து-வெறுத்து, உயர்-உயர்ந்த, முத்தி ஆம்-மோக்ஷமாகிய, வெள்ளத் தேனை-வெள்ளத் தேனை, விரும்பும்-(அடைய) யிச்சிக்கும், விடாயினுன்-ஆசையுடையவன், எள்ளில் போதும்-க்ஷண நேரமாயினும், இராது-(சம்சாரத்தில்) பொருந்தாது, உடன்-(மோக்ஷாபேக்ஷை உண்டான) அப் பொழுதே, ஏகினுன்-(எல்லாவற்றையும் துறந்து) சென்ருன். எ-று. 68

### 94. தனை நனி யிரந்து.

பெருந் திரட்டு (தோன்றி)

வையினும் வாழ்த்தினு மலர்கொ டேத்தினும்,
வெய்யவ ராவிடை விழ நூக்கினு,
மெய்யினு மெறிபினு மியாது செய்யினு,
நைவொடு மகிழ்வில ஞாநி சீலமே. 69

(இ-ள்) வையினும்-(பிறர்) நிந்தித்தபோதினும், வாழ்த்தினும்-துதித்த போதினும், மலர் கொடு-புஷ்பங்களைக் கொண்டு, ஏத்தினும்-அருச்சித்த போதினும், வெய்ய-கொடிய, அரா இடை--சர்பத்தின் மீது, வீழ நூக்கினும்-விழும்படியாகத் தள்ளினுலும், எய்யினும்-(அம்பு முதலியவற்ருல்) எய்யினும், எறியினும்-(கல் முதலியவற்ருல்) எறியினும், யாது செய்யினும்-(இன்னும்) எப்படிப்பட்ட துன்பம் உண்டாகும் படி செய்த போதினும், நைவொடு-(வருந்துகின்ருர்களென்று)துக்கமும், மகிழ்வு-(துதித்து அருச்சிக்கின்ருர்களென்று) சந்தோஷமும், இல-இல்லாதிருப்பதே, ஞாநி-ஞாநியினது, சீலம்-ஒழுக்கமாம். எ-று. ஏ-அசை. 69

## 97. ஊனையோம் புதல்

சுந்தர மூர்த்தி ஸ்வாமிகள் தேவாரம். ஊர்த் தொகை. 7

தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தரா,
வானைக் காவல் கொண்டு நின்ரு ரறியா நெறியானே,
யானைக் காவி லரனே பரனே யண்ணு மலையானே,
யூனைக் காவல் கைவிட் டுன்னை யுகப்பா ருணர்வாரே. 70



(இ-ள்) தேனை--தேனை, காவல் கொண்ட--தன்னிடத்தே யுடையதாய், விண்ட-விரிந்த, செழும்-செழிய, கொன்றை-கொன்றை மலர்களா லாகிய, தாராய்-மாலையை யுடையவனே, வானைக் காவல் கொண்டு நின்ருர்-தேவர்களும், அறியா-அறியாத, நெறியானே--நெறியை யுடையவனே, ஆனைக் காவில்-திரு வானைக் காவில் வாழ்கின்ற, அரனே--சிவனே. பரனே-பரனே, அண்ணுமலையானே-அண்ணுமலையானே, ஊனை-உடல், காவல்-காப்பை, கை விட்டு-நீங்கி, உன்னை-உன்னை, உகப்பார்-விரும்புவோர், உணர்வார்-(உன்னை) அறிவார்கள். எ-று. ஏ-அசை. 70

## 99. அருந்தவ விலக்கிவ்.

திரு நாவுக் கரசு சுவாமிகள் தேவாரம்.

(திருக் கடம்பூர். 9)

நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்,
றென்க டம்பைத்தி ருக்கரக் கோயிலான்,
றன்க டன்னடி யேனையுந் தாங்குத,
லென்க டன்பணி செய்துகி டப்பதே. 71

(இ-ள்) நன்-நல்ல வாசனை பரிமளியாநின்ற, கடம்பனை-கடப்ப மாலை யணிந்த சுப்பிரமணியக் கடவுளை, பெற்றவள்-ஈன்றவ ளாகிய உமாமகேசுவரியை, பங்கினன்-இடது பாகத்தி லுடையவனும், தென்

கடம்பை-தென் கடம்பை (யென்னும் க்ஷேத்திரத்தில்), திருக் கரக் கோயிலான்-திருக் கரத்தைக் கோயிலாகக் கொண்டவனுமாகிய (கடவுளினது), கடன்-கடமை, அடியேனையும்-அடியேனை, தாங்குதல்-இரக்ஷித்தலாம், என் கடன்-என்னுடைய கடமை, பணி-(தேவரீருக்கும்) பணிவிடை, செய்து கிடப்பதே-செய்து கொண்டிருப்பதேயாம், எ-று. தன்-அசை. 'அடியேனையும்' என்றதில் உம்மை. எண்ணும்மை 71

### 99. அருந்தவ விலக்கிவ்.

திருமந்திரம். 1627.

இருந்துவ ருத்தியெ ழிற்றவஞ் செய்யும்,
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே,
யிருந்திந் திரனே யெவரே வரினுந்,
திருந்துநஞ் சிந்தை சிவனவன் பாலே. 72

(இ-ள்) வருந்தி-(பிராணாயாமம் முதலிய) வருத்தத்தோடு, இருந்து-(ஆசநத்) திருந்து, எழில்-சோபை நிறைந்த, தவம் செய்யும்-தவத்தைச் செய்கின்ற, பெருந் தன்மையாளரை-மேன்மை யுடையவர்களை, பேதிக்க-(மநமானது) பேதிக்கும்படி, என்று-(செய்ய-வேணும்) என்று, இருந்து-இருந்து. இந்திரன்-தேவேந்திரன். எவரே-(பிரமா விஷ்ணு முதலிய) யாவரே, வரினும்-வந்த காலத்தும், நம்-நமது. திருந்தும்-நிர்மலமா யிருக்கப்பட்ட, சிந்தை-மநமானது, சிவனவன்-பாலே-சிவ சொரூபத்தே யிருக்கும் (வேறிடம் செல்லாது). எ-று. ஏ-ஏ-அசை. 72



### 99. அருந்தவ விலக்கிய்

ஞாந வாசிட்டம்-(நிர்வாணப் பிரகரணம்) 6-0-63.

எனக்கீ தென்னு முணர்வுடமை
யிடர்விட் டகலா துணர்வின்மை,
யநர்த்த மில்லா வீடளிக்கு
மாசை யேதிங் கதுசெய்வாய்,
சநிப்பில் சிவமெங் கணுமுளது
சாந்தஞ் சுபஞ்சித் துருவென்னுங்,
கனத்த விந்த வொருநினைவே
கருமத் தியாக மிராகவனே. 73

(இ-ள்) எனக்கு ஈது என்னும்-எனக்கு இது (வேண்டு) மென்றும், உணர்வு உடைமை-நிச்சயத்தோடுறுதலானது, இடர் விட்டு அகலாது-துயரை விடவே மாட்டாது, உணர்வு இன்மை-(அவ் வாறு) உணர்வுருமை, அநர்த்த மில்லா-(சர்வ) அநர்த்த நிவிர்த்தி ரூபமான, வீடு அளிக்கும்-(பரமாநந்த வடிவப் பிராப்தி ரூப) மோக்ஷத்தையே பயக்கும், ஏது இங்கு ஆசை-(உனக்கு) எப்படி இங்கு விருப்பமோ, அது செய்வாய், அப்படியே செய்வாய் சநிப்பில்-அஜமாகிய, சிவம்-பரம சிவமே, எங்கணும் உளது-எங்கு மிருக்கின்றது, சாந்தம்-உபசாந்தம், சுபம்-மங்களம், சித்துருவு-என்னும்-அறிவுருவு என்னும், கனத்த இந்த-கனமான இந்த, ஒரு நினைவே-ஒப்பற்ற ஏக நிச்சயமே, இராகவனே-இராமச் சந்திரா, கருமத் தியாகம்-சர்வ சங்கப் பரித்தியாகமாம். எ-று. 73

## திருப் பூ வணம், வேதாந்த மடம்

## ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிக ளவர்கள்,

வைராக்கிய தீப உதாரணக் கவி 73க்கு
எழுதிய தீபச் சுடர் உரை முற்றும்.



| | | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 22 | மாத | மாதா |
| 5 | 16 | தந்தினை | தநத்தினை |
| 6 | 5 | மறிந்துரை | மறித்துரை |
| ,, | 17 | ஐயே | ஐயோ |
| 7 | 5 | யுலனைந்தும் | புலனைந்தும் |
| 8 | 15 | கலத்தை | கலக்கத்தை |
| ,, | 21 | வரூகின்ற | வருகின்ற |
| 14 | 7 | குலைவுளூர் | குலைவுருர் |
| | 9 | கொள்ளூவான் | கொள்ளுவான் |
| 23 | 1 | திருகிய | திருசிய |
| | 19 | டொழித்தோ | டொழிந்தோ |
| | 21 | தக்கேன் | தக்கோன் |
| 24 | 20 | மத்திரஞ் | மந்திரஞ் |
| 26 | 23 | சுட்டது | அட்டது |
| 28 | 12 | தொடாபை | தொடர்பை |
| 29 | 5 | அத்தச் | அந்தச் |
| 30 | 10 | குழப்படி | குளப்படி |
| 32 | 10 | முறல்வரோ | முயல்வரோ |
| 36 | 8 | புன்னியன் | புண்ணியன் |
| 38 | 14 | தலத்தில | தலத்தில் |
| 45 | 24 | பரமசிவனீடத்து | பரமசிவனிடத்து |
| 47 | 3 | வக்ஷண | லக்ஷண |
| 48 | 3 | ஓளி | ஒளி |
| ,, | 9 | கயிறிறில் | கயிற்றில் |
| 51 | 10 | முமூக்ஷு | முமுக்ஷு |
| 52 | 13 | பரிபந்தம் | பரியந்தம். |
| 54 | 7 | யொடுக்கப்பட்டட | யெடுக்கப்பட்ட |
| 55 | 14 | மிதித்திடு | மிகுத்திடு |

## ராம நாத புரம் ஜில்லா திருப் பூ வணம்,

## காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள், வெளியிட்டன.

| | | ரூ.ந.பை |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசகம் | 2—50 |
| 2 | விசார சாகரம் ஹிந்தி மொழி பெயர்ப்பு | 2—25 |
| 3 | கதா சரித் சாகரம் வசகம் கதை | 2—25 |
| 4 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசகம் | 0—50 |
| 5 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசகம் | 0—50 |
| 6 | நைஷ்க் கர்மய சித்தி வசகம் | 0—50 |
| 7 | வேதாந்த பரிபாஷை வசகம் | 0—44 |
| 8 | ஸ்வராஜ்ய சித்தி வசகம் | 0—50 |
| 9 | மண்டல பிராஹ்மண உபநிஷத் | 0—25 |
| 10 | ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம் | 0—25 |
| 11 | ஹரிமீடே - ஹரிதத்வ முக்தாவலி | 0—75 |
| 12 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி | 0—50 |
| 13 | பகவத் கீதை 15வது அத்யாயம், மூர்க்க சதகம் | 0—50 |
| 14 | மந்திர உபதேசம் வசகம் | 0—25 |
| 15 | திருக் களர் வீர சேகர சரிதம் வசகம் | 1—00 |
| 16 | நாநா ஜீவ வாதக் கட்டளை உரை | 2—00 |
| 17 | கீதா சாரத் தாலாட்டு வகு சந்திரிகை உரை | 2—00 |
| 18 | மேற்படி நக்ஷத்திர விளக்க உரை | 0—25 |
| 19 | மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை | 2—00 |
| 20 | பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப்புரை | 1—50 |
| 21 | வைராக்ய தீபம்-பத உரை பொழிப் புரை | 0—50 |
| 22 | சீடாசாரம், பால போதிநி உரை | 0—50 |
| 23 | வேதாந்த சாஸ்திரத் ரத்நாவலி 9 சேர்ந்தது | 3—00 |
| 24 | கீதாத் திரயம் கவி (ஈசுவர கீதை பகவத் கீதை பிரஹ்ம கீதை 3 சேர்ந்தது) | 3—00 |
| 25 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் (விவேக சூடாமணி அஞ்ஞு வதைப் பரணி பஞ்சதசி மூன்று சேர்ந்தது) | 3—20 |

| | | |
|---|---|---|
| 26 | வாசிட்டம் 2055 கவி | 2—25 |
| 27 | ஒன்பது துறவிகள் பாடிய, திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, அருட் பா மாலே | 1—00 |
| 28 | வீர சேகரத், திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி மணி மாலே சிறு சுடர் உரை | 0—75 |
| 29 | மேற்படி பத உரை | 0—25 |
| 30 | வைராக்கிய சதக தோத்திர உரை | 0—19 |
| 31 | ஈசுவர கீதை கவி | 0—25 |
| 32 | பகவத் கீதை கவி | 1—25 |
| 33 | பிரஹ்ம கீதை கவி | 0—38 |
| 34 | கைவல்ய நவநீதம் கவி | 0—56 |
| 35 | பஞ்சதசி கவி | 0—62 |
| 36 | வேதாந்த சஞ்ஞா வசநம் | 0—13 |
| 37 | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி | 1—50 |
| 38 | தி[illegible]ம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி | 0—25 |
| 39 | காசி[illegible]நந்த விஜயம் | 0—25 |
| 40 | கைவல்ய நவநீதம், துறவு சாமிகள் பத சார உரை | 3—50 |
| 41 | கைவல்ய நவநீதம் கிருத பாந உரையும், ஆராய்ச்சி களும் | 3—50 |
| 42 | சசிவந்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2—00 |
| 43 | வைராக்ய தீப உரை உதாரணக் கவி 73க்கு தீபச் சுடர் உரை | 1—00 |
| 44 | வீர சேகரத் திரு எம்பாவை-திருப்பள்ளி எழுச்சி ஆசார்ய திரய தோத்திர ரச மஞ்சரி (கவி 64.) | 0—25 |
| 45 | வைராக்ய (பக்தி) சதக உரை உதாரணக் கவி 103க்கு பக்தி ரச உரை. | 1—00 |
| 46 | கோவி லூர் மடத்தின், அத்புத மகிமா அகூபாரம். | 0—50 |
| 47 | மகாத்ம சரிதாமிருதம்-வசநம். | 2—50 |
| 48 | பிரபோத சுதாகரம்-பதப் பொருள் மொழி [பெயர்ப்பு | 0—50 |
| 49 | காணுத சித்தாந்த சந்திரிகை (தர்க்கம்) மொழி [பெயர்ப்பு. | 1—00 |
| 50 | சப்த பதார்த்தீ (தர்க்கம்) மொழி பெயர்ப்பு. | 1—00 |
| 51 | கைவல்ய நவநீத உரை உதாரணக் கவி ஆதித்தன் [உரை. | 2—50 |